# கல்கி

தென்னாற்காடு
மாவட்டத்தில்
கல்கி — II

KALKI
21.9.86
ரூ. 1.50

"நெருப்பை அணைச்சாங்க; லஞ்சமும் கேட்டாங்க!"

8 வருடங்களாய் ஒரு போராட்டம்!






# பிலிப்ஸ்

## சென்ற ஆண்டு பிலிப்ஸ் வழங்கிய "முற்றிலும் புதியதை" விட வேறு சிறந்தது உண்டா?



இந்த ஆண்டின்
மிக நவீனமானதை
வழங்குவதும் பிலிப்ஸ்

5 பெரிய ஸ்டீரியோ டூ-இன்-ஒன்கள்


D 8248 ரூ. 3150/-*


AR 538 ரூ. 2200/-*


AR 458 ரூ. 1950/-*


D R 568 ரூ. 2600/*


AR 448 ரூ. 1800/-*

* எக்சைஸ் வரி உள்ளிட்டது. தல வரிகள் தனி. இந்த விலைகள் மாற்றத்திற்கு உட்பட்டவை. லைசென்ஸ் தேவை இல்லை.

CLARION/B/P/190/203 TAM

**பிலிப்ஸ் – ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

# "நெருப்பை அணைச்சாங்க; லஞ்சமும் கேட்டாங்க!"

**அ**துவோர் அரிஜனக்காலனி. வாலிபர்களும் பெண்களும் வேலையைத் தேடி வயல் வரப்புகளுக்குச் சென்றுவிட, காலனியில் இருந்தது முதியவர்கள் — குழந்தைகள் மட்டும்தான். 21.6.86 அன்று மதியம் ஒரு மணி. திடீரென்று ஒரு குடிசையிலிருந்து தீப்பொறி.

"ஐயோ தீ... ஐயோ... தீ!"

கத்தியதால் ஒன்றும் பிரயோஜனமில்லை. தீயணைப்பு வண்டி வந்து செயலில் இறங்குவதற்குள், மின்னல் வேகத்தில் தீயின் கங்குகள், பன்னிரண்டு குடிசைகளைக் கபளீகரம் செய்துவிட்டன.

வேதனையில் துடித்தனர் அரிஜன மக்கள்! அவர்களிடம் தீயணைப்புப் படை வீரர்கள் வந்தனர். அப்போது நடந்தது என்ன?

"அந்தத் தீயணைப்புப் படை வீரர்கள் எங்களிடம் வந்து, 'நாங்கள் எழுதிக் கொடுத்தால்தான் உங்களுக்கு அரசாங்கத்திலிருந்து நஷ்ட ஈடு கிடைக்கும். ஆகையால் எங்களுக்குப் பணம் கொடுங்கள்!' என்று வெளிப்படையாகவே கேட்டார்கள்.

"ஏற்கெனவே இருந்ததை எல்லாம் இழந்துவிட்டு உட்கார்ந்திருந்த எங்களுக்கு, அவர்கள் சொன்ன வார்த்தைகள் நெருப்பை விடக் கொடியதாகக் காதைச் சுட்டன. நாங்கள் கெஞ்சிப் பார்த்தோம். 'ஐயா... எங்ககிட்ட பணம் இல்லீங்க.. தயவு செய்து நீங்க கொடுக்க வேண்டிய சான்றிதழை அரசுக்குக் கொடுத்திடுங்க...!' என்று. ஆனால் அந்தத் தீயணைப்பு வீரர்கள் கொஞ்சம் கூட எங்கள் வேதனையைக் கண்டு கொள்ளவில்லை. காசு ஒன்றே குறி என்பது போல் பேசினார்கள். நாங்கள் அப்புறம் என்ன செய்ய முடியும்? வேதனையோடு வேதனையாக எரிந்த குடிசைகளுக்குச் சொந்தக்காரர்கள் ஐந்து பேர் சேர்ந்து அங்கேயும் இங்கேயுமாகப் புரட்டி மொத்தம்



* கத்தா

நூறு ரூபாய் கொடுத்தார்கள்!'' என்றார் காலனியைச் சேர்ந்த ஆறுமுகம்.

பிறகு, மீண்டும் 25.6.86 அன்று அதே நேரம். ஏற்கெனவே தீப்பிடித்த குடிசைகளின் எதிர்வரிசையில் உள்ள குடிசைகளில் ஒன்றிலிருந்து மறுபடியும் தீ.

மீண்டும் கூக்குரல்கள்; அழுகைகள்!

தீயணைக்கும் வண்டி வந்து கொஞ்ச நஞ்சம் எரிந்து கொண்டிருந்த தீயை அணைப்பதற்குள் இரண்டு குடிசைகள் சாம்பல்! இப்போதும் 'பணம்' கேட்டார்கள். எது



* ராமசாமி

வந்தாலும் வரட்டும் என்று இல்லையென்று சொல்லி-மறுத்து விட்டோம்!''

— இப்படி அந்தக் காலனி மக்கள் சொல்லச் சொல்ல... உங்களுக்கே வயிறு பற்றியெரிவது போல் இருக்கிறதா? 'இதுவரை லஞ்சம் என்ற ஒன்று இல்லாத துறை தீயணைப்புத்துறை ஒன்றுதான் என்று நம்பிக் கொண்டிருந்தோம். அந்த நம்பிக்கையின் மேலும் மண்போட்டு மூடிவிட்டார்களே இந்தத் தீயணைப்புப் படையினர்!' என்று கொதித்துப் போகிறீர்கள் அல்லவா?

இந்தச் சம்பவம் நடந்தது திட்டக்குடி தாலுகாவிலுள்ள கொடிகளம் என்னும் கிராமத்தில்! நாங்கள் இதைப் பற்றி விசாரிக்கச் சென்ற போது, காலனியே திரண்டு வந்து முறையிட்டது.

ராமசாமியின் குடும்பம் ஐந்து குழந்தைகளைக் கொண்டது. கண் தெரியாத ராமசாமியிடம் வீடு எரிந்த விஷயத்தை விசாரித்த போது அழுது விட்டார். அவர் மனைவிதான் வேலைக்குச் சென்று வந்து குடும்பத்தைக் காப்பாற்றுகிறார். ''தீயணைப்புக் காரங்களுக்கு ரூபாய் கொடுத்து பின்னர் திட்டக்குடி தாசில்தாரைப் பார்க்கப் போனோமுங்க. எங்களுக்கு அரசாங்கம் முந்நூறு ரூபாய் உதவிப் பணம் கொடுத்திருப்பதாகச் சொன்னாங்க. ஆனா கையில கொடுத்தது இருநூற்றியெழுபது ரூபாய்தாங்க. முப்பது ரூபாயை அவுங்க பிடிச்சுக்கிட்டாங்க!''

'ஏன்? எதற்கு? என்று கேட்டால் இருப்பதும் போய்விடும் என்று வாயைப் பொத்திக்கிட்டு வாங்கிட்டு வந்துட்டோங்க...



* காமராசன்



* வீரம்மா

எங்க வீட்டிலே பத்து மரக்கா நெல்லு இருந்துதுங்க. புதுத் துணி இரண்டு இருந்துதுங்க... எல்லாம் போச்சுங்களே...' கேட்பவர்கள் மனது கரையும்படியாக அழுத குரலில் முறையிட்டார் ராமசாமி.

எரிந்து போன ஒரு குடிசையின் வாசலில் சோகமே உருவாக செல்லன் என்ற முதியவரும் அவர் மனைவி சுத்தாவும் உட்கார்ந்திருந்தனர். நாங்கள் போய் விஷயத்தைக் கேட்டதும், ''எங்க மகன் பக்கத்தில இருக்கான். ஒரே குடிசைதான். ஆனா தனித்தனியாகத்தான் இருக்கோங்க. எங்களுக்கு உதவிப் பணம் தரலீங்க. எங்களை ஒரு தனிக் குடும்பமா எடுத்துக்காம, ஒரே குடிசையிலேதான் இருக்காங்கன்னு ஒருத்தருக்கு மட்டும் உதவிப் பணம் கொடுத்துவிட்டு பக்கத்துலெ குடியிருக்கிறவங்களுக்கு இல்லேன்னுப்புட்டாங்க!'' என்று சுத்தா மிகவும் ஆவேசமாகப் பேசினார்.

இது மட்டும்தானா? இந்தக் காலனியில் இது போன்று பல விஷயங்கள் பற்றிய குறைகளை முறையிட்டார்கள்.

''எங்க காலனியில இடநெருக்கடி ஜாஸ்திங்க. ஒரே குடிசையில் மூணு, நாலு குடும்பங்கள் இருக்குதுங்க. ஊருக்கும் எங்க காலனிக்கும் இடையில் ஏழு ஏக்கர் புறம்போக்கு நிலம் இருக்கு. அதில எங்களுக்கு வீடு கட்டித்தாங்களேன்னு தாசில்தாரிடம் சொன்னோம். ஒண்ணும் நடக்கல்லீங்க!'' என்றார் காமராசன்.



* ஆறுமுகம்

''இந்தக் காலனி மக்களுக்குச் சுடுகாடும் ஒரு பிரச்னைதான். ஒன்றரை சென்ட் நிலம்தான் ஹரிஜன சுடுகாட்டுக்கு ஒதுக்கியிருக்கிறார்களாம். பல சமயங்களில் இடநெருக்கடி காரணமாக ஒரு பிணத்தின்

மேலேயே இன்னொரு பிணத்தைப் புதைக்க வேண்டியிருக்கிறதாம். இதைச் சொன்ன வீரம்மா, ''பாருங்க ஐயா! போயிட்ட உடம்புக்குக் கூட இடம் இல்லிங்க!'' என்று விரக்தியோடு சொன்னார்.

இந்த மக்களின் இன்னொரு பிரச்னை ரேஷன் ஷாப். இது ஊருக்குள் இருப்பதால் எப்போது சீனி, மண்ணெண்ணெய் வருகிறது என்பது காலனி மக்களுக்குத் தெரியாமல் போய்விடுகிறதாம். எப்போது போய்க் கேட்டாலும் ''இல்லே, தீர்ந்து போச்சு!'' என்ற பதில்தான் கிடைக்கிறதாம். அஞ்சலம் என்ற பெண்மணி சொன்னார்.

கண்ணன் என்பவர், ''எங்களுக்கு நாதியில்லேன்னுதாங்க எங்களை இப்படி வாட்டறாங்க... நீங்கதாங்க இதுக்கு ஏதாவது வழி செய்யணும்!'' என்று நம் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் பலகிராமங்களைத் 'தத்து' எடுத்துக்கொண்டு இருக்கின்றன. இப்போதிருக்கும் சூழ்நிலையில் அரசின் உதவிகள் இந்த ஆதி திராவிட சமூகத்தை வந்தடைய இன்னும் பல ஆண்டுகள் ஆகும் போலிருக்கிறது. ஏதாவது ஒரு நாட்டுடைமை வங்கி இந்தக் காலனியின் மேல் கருணைக் கண் வைக்குமா?

கடைசியாகக் கொடிகளம் கிராமத்தில் தீயணைப்புப் படையின் சான்றிதழ் வழங்க வேண்டுமானால் பணம் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்திப் 'பணம்' பெற்றுக் கொண்ட விஷயத்தை மாநில தீயணைப்பு டைரக்டர் ராஜகோபாலிடம் சொன்னோம்.

''அப்படியா? இந்தச் செய்தி எனக்குப் புதிது. தவறு நடந்திருக்குமானால் நிச்சயம் சம்பந்தப்பட்டவர்கள் தண்டிக்கப்படுவார்கள். நாங்கள் இலாகா பூர்வமான விசாரணை செய்வது மட்டுமின்றி போலீஸாரிடம் கேஸ் நடத்தச் சொல்லுவோம். தவறு நடந்திருக்குமாயின் நிச்சயம் நடவடிக்கை எடுக்கப்படும். எந்தத் தீயணைப்பு நிலையத்திலிருந்து வண்டி சென்றது என்பதை முதலில் விசாரிக்கிறேன்'' என்றார்.

பிறகு இரண்டு நாட்கள் கழித்து அவரே நமக்குப் போன் செய்து, ''ஆமாம் சார்! அங்கே 'பணம்' வாங்கியிருப்பது உண்மைதான் என்று விசாரணையில் தெரிய வந்தது. உடனடியாக அந்தப் பணத்தை அந்த மக்களுக்கே திருப்பிக் கொடுக்க உத்தரவிட்டதோடு, சம்பந்தப்பட்ட தீயணைப்புப் படை வீரர்கள் மேலும் நடவடிக்கை எடுக்க உத்தரவிட்டுள்ளேன்!'' என்றார்.

— ப்ரியன்

அட்டையில்: நம்மிடம் முறையிட்ட கொடிகளம் காலனி மக்கள்.

அட்டை வண்ணப்படங்களும் தென்னாற்காடு மாவட்டச் செய்திகள் தொடர்பான மற்ற படங்களும் எடுத்தவர்:

கே. வி. ஆனந்த்

## அடுத்த இதழில்...



* 'விளையாட்டின் நோக்கம் வெற்றி மட்டுமா?'

— ஸ்ரீகாந்த் பேசுகிறார்



* ''குறைகளைக் கூறும் உங்களுக்கு நன்றி சொல்கிறேன்!''

—தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் பேட்டி

# இளமைக்கு முதலிடம்!

இந்தியாவுக்கு இப்போது வந்துள்ள ஆஸ்திரேலியக் கோஷ்டியை முதல் தர டீம் என்று வர்ணிக்க முடியாது. ஆனால் முதல்



• காப்டன் ஆலன் பார்டர்

தர இளைஞர் அணி என்று உறுதியாகக் கூறலாம். இரண்டுக்கும் என்ன வித்தியாசம்? இருக்கிறது:

ஆஸ்திரேலிய கிரிக்கெட் மன்னர்களாக விளங்கிய லில்லி, சாப்பல், ராட்மார்ஷ் போன்றவர்கள் 1984 இல்தான் ஓய்வு பெற்



• டேவிட் கில்பர்ட்

றார்கள். போதாக் குறைக்கு நிறவெறி கொண்ட தென் ஆப்பிரிக்காவை பகிஷ்கரிக்க வேண்டும் என்ற கோரிக்கையை அலட்சியப்படுத்தி, பணம் ஒன்றே குறியாக, ஹாக், ஹூக்ஸ், யூால்லப் போன்ற பதினைந்து தலைசிறந்த ஆட்டக்காரர்கள் போய் விட்டார்கள். எனவே புதிதாக டெஸ்டில் ஆடத்தகுதி பெற்ற இளைஞர்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. இந்தியாவுக்கு அனுப்ப. இப்போது

• ஸ்டீவ் வாஹ



வந்துள்ள குழுவில் ஆலன் பார்டர், கிரெய்க் ரீச்சி, ப்ரைட் ஆகியோர் மட்டுமே ஏற்கெனவே இந்தியாவுக்கு வந்து ஆடியிருப்பவர்கள். மற்றவரெல்லாம் புதுசு தான்.



• ப்ரூஸ் ரீட்

தேர்வுக் குழு தாக்குதலுக்கு உள்ளாவது இந்தியாவில் மட்டுமல்ல (சமீபத்தில் காவஸ்கர் பிரச்னை); ஆஸ்திரேலியாவிலும் உண்டு! விக்கெட் கீப்பர் வெய்னி ஃபிலிப்ஸ் ஆஸ்திரேலிய டீம் தேர்ந்தெடுக்கப்பட்ட விதம் பற்றிக் கடு



• மானேஜர் பாப் ஸிம்ஸன்

மையான விமர்சனம் செய்தார். கைமேல் பலன் கிடைத்தது. அபராதம் 1750 டாலர் தவிர இந்தியாவில் ஆட வாய்ப்பு தரப்படவில்லை. நம்மூர் போல தேர்வுக்குழு மேல் ஆணியை ஏற்பதும் பல்டி அடிப்பதும் ஆஸ்திரேலியாவில் கிடையாது போலும்!

காப்டன் பார்டர் பற்றிச்



• கிரெய்க் மெக்டேர்மட்

* டேவிட் பூன்



சிவு: இடது கை பாட்ஸ்மன், ஸ்பெஷலிஸ்ட் ஸ்லிப் ஃபீல்டர், சுருள் பந்து வீச்சாளர். 1979 இல் இந்தியா வந்த பார்டர் குவித்த ரன்கள் 521; சென்னை டெஸ்ட்டில் 102 — 50.



* டிம் ஜூக்ரர்

ஆஸ்திரேலிய மயில் வேகப் பந்து வீச்சாளர்கள்: ரீய்ட், மெக்டர்மிட், டேவிட், கில்பர்ட்.

பாட்ஸ்மன்கள்: பார்டர், மார்ஷ், பூன், ரீச்சி, வாலெட்டா. இவர்களில்



* மாத்யூஸ்

## சிக்ஸர் Vs பவுண்டரி

இரண்டு வருடங்களுக்கு முன்னால் சந்திப் பாட்டீலை ஆசிரியராகக் கொண்டு 'ஷட்கார்' என்ற மராட்டியப் பத்திரிகை ஆரம்பிக்கப் பட்டது. 'ஷட்கார்' என்றால், 'சிக்ஸர்.' கிரிக்கெட்டுக்கு முக்கியத்துவம் தந்து வெளிவரும் இந்த மாதமிருமுறைக்குப் போட்டியாக இப்பொழுது 'சௌக்கார்' என்ற பத்திரிகை ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் கனில் காவஸ்கர். சௌக்காரின் அர்த்தம் 'பவுண்டரி' 'ஷட்கார்' பத்திரிகைக்காரர்கள் 'சௌக்கார்' பத்திரிகை மீது வழக்குத் தொடரப் போவதாகச் சொல்கிறார்கள். சிக்ஸர் பவுண்டரியை ஜெயிக்குமா என்பதே கேள்வி.

— செம்பூர் சந்துரு

வாலெட்டா இங்கிலாந்துக்கு 1983 இல் விஜயம் செய்த ஆஸ்திரேலிய இளைஞர் கிரிக்கெட் அணிக்குக் காப்டனாகஇருந்துபெருமை பெற்றவர்.



* கிரெய்க்ரீச்சி



* பிரைட்

விக்கட் கீப்பர்கள்: டையர், ஜூக்ரர்.

ஆல்ரௌண்டர்கள்: மாத்யூஸ், வாஃ.

இவர்கள் எல்லாம் சொந்த வாழ்க்கையில் விவ



* ஆலன்ரொம்பட்டன்



* ஜியாப் மார்ஷ்

சாயம் முதல் வங்கி வரை பலவித தொழில் அல்லது உத்தியோகங்களில் இருப்பவர்கள். தலைசிறந்த ஆட்டக்காரர்களுக்கு ஆஸ்திரேலிய கிரிக்கெட் கண்ட்ரோல்



* டீன் ஜோன்ஸ்

போர்டு வருடாந்திர மானியங்கள் வழங்கி வருகிறது!

பெங்களூரில் மைக் வாலெட்டா நெற்றியில் சிவப்புப் பொட்டுடன் காட்சியளித்தார். நமது பெண்மணிகள் ஒட்டிக் கொள்கிற குஜிலி பொட்டுத்தான் — அவரைக் கவர்ந்திருக்கிறது!

மானேஜர் பாப் ஸிம்ஸன் பழம்பெரும் ஆட்டக்காரர். அவருக்கு இந்தியச் சூழல் நல்ல பழக்கம்.

பம்பாயில் வந்து இறங்கியதும் காப்டன் ஆலன் பார்டர், "பாஸிடிவ் கிரிக்கெட் ஆடுவோம்" என்று உறுதி அளித்தது வரவேற்கத் தக்கது. வெற்றிக்குயிழைவதை விடத் தோல்வியைத்தவிர்ப்பதே முக்கியமாகி விடக்



சைமன் டேவிஸ்



* கிரெக் டையர்

கூடாது. அது கிரிக்கெட்டே அல்ல. இதை ஆஸ்திரேலிய காப்டன் உணர்ந்து பேசியதற்காக வாழ்த்தும் போது செயலிலும் காட்டுங்கள் என்று கேட்டுக் கொள்கிறோம்!

தகவல்கள்:

**ஹிந்து விமர்சகர்**
**மோகன், குண்டுமணி.**

# பின்னியின் இணைப்புகள் ரம்மியமானவை!

## பின்னி

(பக்கிங்காம் கர்நாடிக் மில்ஸ், சென்னை)

**மின்னிவரும் புதிய படைப்புகள்**

**மாலினி • அனாமிகா**

100% பாலியெஸ்டர் புடவைகள்

**மேகனா • வரோனிகா**

100% பாலியெஸ்டர் ஷிப்பான் புடவைகள்

**பிரின்ஸ்**

100% பாலியெஸ்டர் வேஷ்டிகள்

**2 X 2 ரிகோ ரூபியா**

பிளவுஸ் மெட்டிரியல்ஸ்

உங்கள் அபிமானம் பெற்ற
எல்லா ஜவுளி கடைகளிலும்
கிடைக்கும்

மொத்த விற்பனையாளர்

**எம்.சி.டிரேடர்ஸ்**

63. கிடங்கு தெரு, சென்னை-600 001.

போன் : 22652/28441

GUARANTOR BHATTED ASSOCIATES MADRAS

LOTUS

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள் வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






GLL/8806

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

# வெண்ணெய் உருகு முன்னே...






















தகவல்: மௌஷ்மி

உயிர்...
ஜியா
...தப்பியவர்கள்
ஜியா:
இடுப்பு வரை என்னைப் படம் பிடிச்சுக்க, போதும்!
மீட்புப் பணியில் குளறுபடி — உயிர் துறந்த பயணிகள்

நான் என்ன, ஹிந்தியை கட்டாயமாவா திணிக்கறேன்?
ஹிந்தியைக் கட்டாயமாவா திணிக்கறேன்னு சொல்லிக்கிட்டே கட்டாயமா திணிக்கிறாரே!
ஹிந்தி பேசாத மாநிலத்தவர் →
மத்திய அரசு

கோடி கோடியா பணம் செலவு பண்ணி 1990லே தண்ணி கொட்டப் போறது பாரு!
முயற்சிக்குக் குறைச்சல் இல்லே; தாமதத்துக்குக் காரணம் புரியலே!
வீரப்பன்
பேச்சுக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லே! ஒரு சொட்டுத் தண்ணியைக் காணோம்!
காளிமுத்து
தெலுங்கு கங்கை
சென்னை வாசி




# கல்கி

1986 செப்டம்பர் 21
மலர் 45 இதழ் 8
அக்ஷய புரட்டாசி 5




# காவஸ்கர் ரிடயர் ஆக வேண்டுமா?

ஒருநாள் கிரிக்கெட் பந்தயத்திலிருந்து காவஸ்கர் நீக்கப்பட்டதும் மறுபடி சேர்த்துக் கொள்ளப்பட்டதும் இந்தியக் கிரிக்கெட் ரசிகர்களால் நீண்ட காலம் விவாதிக்கப்பட்டு வரும். தேர்வுக் குழு ஒருநாள் கிரிக்கெட் பந்தயத்திலிருந்துதான் அவரை ஒதுக்கியது. பல நாள் மாட்சுகளிலிருந்து அல்ல. 'உலகக் கோப்பையை வெல்லக் கூடிய சிறந்த அணியை உருவாக்க வேண்டும்; இதற்கு இளம் இரத்தத்துக்கு வாய்ப்பளித்துப் பரிசோதித்துப் பார்ப்பதே நோக்கம்' என்று தேர்வுக் குழு கூறினாலும் கபில்தேவின் கருத்துப்படிதான் தேர்வுக் குழு காவஸ்கரை நீக்கியது என்றும் பேசப்படுகிறது. இதில் உண்மை இருக்கலாம், இல்லாமலும் போகலாம். ஆனால் காப்டனுடைய விருப்பத்துக்குத் தேர்வுக் குழு மதிப்புக் கொடுப்பதில் தவறு ஏதும் இல்லை. ஏனெனில் ஆட்டத்தில் வெற்றி பெற வேண்டும் என்ற நோக்கில்தான் காப்டன் தேர்வுக் குழுவிடம் தமது யோசனைகளைத் தெரிவிப்பார். தனிப்பட்ட விரோதம் ஓர் ஆட்டக்காரரிடம் இருந்தால்கூட ஆட்டத்தில் வெற்றி பெறும் வாய்ப்பு அவரால் அதிகரிக்கும் என்றால் அந்த ஆட்டக்காரரை காப்டன் விட்டுவிடப் போவதில்லை. அப்படி விட்டு விடுவது தனக்குத்தானே சவக் குழி தோண்டிக் கொள்வதுபோல் ஆகும்.

81 ஒருநாள் பந்தயங்களில் 2169 ரன்களை காவஸ்கர் எடுத்திருக்கிறார். இது சராசரியில் 33.36 ரன்கள் ஆகும் என்று சிலர் புள்ளி விவரம் தந்து, காவஸ்கர் ஒருநாள் பந்தயத்துக்கும் இன்றியமையாதவர் என்று கூறுவார்கள். ஆனால் ஒருநாள் பந்தயத்தில் ரன்கள் எடுப்பது மட்டும் முக்கியமில்லை; எத்தனை ஓவர்களில் அந்த ரன்கள் எடுக்கப்படுகின்றன என்பதும் முக்கியம். (இதை எழுதும்போது அறுபது பந்துகளில் போதம் செஞ்சுரி அடித்த அதிசயச் செய்தி வெளியாகியுள்ளது!) ஆரம்ப காலத்தில் ஒருநாள் பந்தயங்களில் சோபிக்காவிட்டாலும் சமீப காலத்தில் காவஸ்கர் ஒருநாள் பந்தயங்களிலும் பிரகாசிக்கிறார் என்றும் ஒரு பக்கத்தில் நங்கூரம் பாய்ச்சி ஆடக் கூடியவர் ஒருநாள் பந்தயத்துக்கும் தேவைதான் என்றும் காவஸ்கர் தரப்பில் வாதாடுகிறவர்கள் கூறுகிறார்கள்.

முன்பெல்லாம் கிரிக்கெட்டை ஆட்டத்துக்காக மட்டும் ஆடி வந்தார்கள். இப்போது பணத்துக்காவும் ஆடுகிறார்கள். ஏராளமான பெரிய நிறுவனங்கள் கிரிக்கெட் மோகத்தைத் தங்கள் சுய விளம்பரத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளும் நோக்கில் பணத்தைத் தண்ணீராகச் செலவழிக்கின்றன. ஆட்டக்காரர்களுக்கும் நிறையவே பணமும் பரிசுகளும் கிடைக்கின்றன. எனவே, 'நம்மால் இனி இந்திய அணிக்குப் பிரயோஜனமில்லை என்பது சந்தேகத்துக்கிடமின்றி நிரூபணமானாலொழிய, நாம் ஏன் அணியில் நமது இடத்தை விட்டுக் கொடுக்க வேண்டும்?' என்ற எண்ணம் ஆட்டக்காரர்களிடையே தலைதூக்கியுள்ளதில் வியப்பில்லை. 'இவரைவிடச் சிறந்த ஆட்டக்காரர்களாக இளைஞர்களில் யாரேனும் இருக்கிறாரா? இருந்தால் பேசுங்கள்; இல்லையெனில் இவருக்கே தொடர்ந்து வாய்ப்பளியுங்கள்' என்ற ரீதியில்தான் கிரிக்கெட் தேர்வுக்குழுவும் கண்ட்ரோல் போர்டும் சிந்திக்கவும் செயல்படவும் வேண்டிய நிர்ப்பந்தச் சூழல் நிலவுகிறது.

காவஸ்கரின் ஆட்டத் திறனை யாருமே குறைத்து மதிப்பிட்டு விட முடியாது. அவரது ஏராள சாதனைகள் புள்ளி விவரங்களாக உலகறியப் பேசப்படுகிறவை. இந்த டெஸ்ட் தொடரின் போது பம்பாயில் காவஸ்கருக்கு ஒரு மகத்தான பரிசு வழங்கப்படவிருக்கிறது. உலகப்படம் பொறிக்கப்பட்ட தங்கத் தட்டில், காவஸ்கர் எந்தெந்த நகரங்களிலெல்லாம் செஞ்சுரி அடித்திருக்கிறாரோ அங்கெல்லாம் ஒவ்வொரு வைரம் பதித்து அவருக்கு அளிக்க இருக்கிறார்கள். சாதனைகள் பல புரிந்த காவஸ்கரை மேலும் பல சாதனைகள் புரிய வாழ்த்தும்போதே, இன்றையச் சூழலில் புகழின் உச்சியில் இருப்பவருக்குத்தான் பொறுப்பும் அதிகம் என்பதை நினைவூட்டவும் விரும்புகிறோம். ஒருவரது ஆட்டத் திறன் குறைந்து வருகிறது என்பதை மற்றவர்களை விட அந்த ஆட்டக்காரரேதான் முதலில் நன்கு உணர முடியும். அத்தகைய சந்தர்ப்பத்தில் காவஸ்கர் சரியான முடிவெடுக்கத் தயங்க மாட்டார் என்றும் இளைஞர்களுக்குக் கிரிக்கெட் நுணுக்கங்களைக் கற்றுத் தந்து ஊக்குவிப்பதில், முழு கவனம் செலுத்துவார் என்றும் நம்புகிறோம். அவரைத் தேய்பிறை காணாத முழு மதியாகவே நமது இதயங்களில் வைத்துப் போற்ற ஆசைப்படுகிறோம்!

---

தமிழ்த் திருநாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.



# வருடங்களும் ஒரு போராட்டம்!



* நம்மிடம் முறையிட்ட இசைக் கலைஞர்கள்

"எங்கள் மாவட்டத்தில் ஒரு நாதஸ்வர — தவில் இசைக் கல்லூரியை எப்படியாவது கொண்டு வந்துவிட வேண்டும்! இந்த ஒரே லட்சியத்திற்காகத்தான் தென்னாற்காடு மாவட்ட கிராம இசைக் கலைஞர்கள் ஒருங்கிணைப்புச் சங்கம் என்ற எங்கள் சங்கம் ஏற்பட்டது. தனியொருவராகக் குரல் கொடுத்தால் எடுபடாது என்பதால்தான், கிராமம் கிராமமாகச் சென்று மாவட்டம் முழுவதிலுமுள்ள சுமார் ஐந்நூறு இசைக் கலைஞர்களை ஒருங்கிணைத்துக் கடந்த 20.1.79 இல் இச்சங்கத்தைத் துவக்கினோம்.

"எங்கள் கோரிக்கையை வலியுறுத்தி அரசாங்கத்துக்கு மாதம் ஒரு மனு கொடுத்துப் பார்த்தோம்; கடலூருக்கு எந்த மந்திரி வந்தாலும், கால் கடுக்கக் காத்திருந்து எங்களுடைய நீண்ட நாள் கோரிக்கையைச் சொல்லுவோம்; அவரும் 'பார்க்கலாம்' என்று பதில் சொல்லிவிட்டு, கடலூரை விட்டுப் புறப்படும்போதே எங்கள் கோரிக்கையையும் ஞாபகமாய் மறந்துவிட்டுப் போய்விடுவார்!

"இதனால் மனுக் கொடுப்பதில் பிரயோஜனமில்லை; இன்னும் கொஞ்சம் வீரியமாய்ப் போராட வேண்டும் என முடிவு செய்து, கடந்த 11.5.79 ஆம் தேதி சர்வ கட்சிப் பேரணியொன்றை இசை முழக்கத்துடன் நடத்திக் காட்டினோம். அதன்பின் எங்கள் சங்கத்திலுள்ள சுமார் ஐந்நூறு இசைக் கலைஞர்களும் ஒன்றாகச் சேர்ந்து கலெக்டர் ஆபீஸ் முன்னால் ஒருநாள் உண்ணாவிரதம் இருந்து எங்களின் நியாயமான கோரிக்கையை மீண்டும் வலியுறுத்தினோம். ஆனாலும் பலன் என்னவோ பூஜ்யம்தான்!

ஆனாலும் நாங்கள் மனம் தளரவில்லை. மீண்டும் பல நாதஸ்வர இசைக் கலைஞர்களை ஒன்று திரட்டி, கலெக்டர் ஆபீஸ் முன்பு 'தொடர் இசைப் போராட்டம்' நடத்தினோம். எங்களது தொடர் இசை மழையில் கலெக்டர் ஆபீஸே ஸ்தம்பித்தது! ஆனாலும் என்ன பயன்? நாதஸ்வர இசைக் கல்லூரி வரவில்லையே?

"எல்லா வழிகளிலும் முயற்சி செய்து பார்த்து விட்ட நாங்கள், எங்களது கடைசி முயற்சியாக முதல்வர் எம். ஜி. ஆரை நேரில் சந்தித்து எங்கள் கோரிக்கையை சமர்ப்பித்து விடுவது என்ற முடிவுக்கு வந்தோம். எம். ஜி. ஆரை எப்படிச் சந்திப்பது என்று நாங்கள் திண்டாடிக் கொண்டிருந்த நேரத்தில் அதற்கும் ஒரு சந்தர்ப்பம் கைகூடி வந்தது. 79 ஆகஸ்ட் மாதம் கடலூரில் நடந்த பெரியார் நூற்றாண்டு விழாவில் கலந்து கொள்ள எம். ஜி. ஆர். வருவதாக அறிந்தோம். அந்த விழாவின்போது ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஊர்வலத்தில், மங்கள இசை வழங்க நாங்கள் ஒப்புக் கொண்டோம். ஐம்பதுக்கும் அதிகமான நாதஸ்வர, தவில் கலைஞர்கள் ஒன்றுகூடி மங்கள இசை வழங்கி ஊரையே ஒரு கலக்குக் கலக்கினோம். அதற்கு ஊதியம்கூட ஏதும் பெற்றுக்கொள்ளவில்லை. காரணம், எம். ஜி. ஆரைச் சந்தித்து, கோரிக்கையைச் சமர்ப்பிக்க இது ஒரு சந்தர்ப்பம்; அதுவே எங்களுக்குப் பெரிய சன்மானம் என்று நினைத்ததுதான்! எம். ஜி. ஆரும் மனுவை வாங்கிக் கொண்டு சென்றாரே தவிர, ஏதும் நடக்கவில்லை!

"அரசாங்கத்தை நம்பித்தான் பிரயோஜனமில்லை; மடாதிபதிகளாவது உதவ மாட்டார்களா என்று நினைத்து மைலம் ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமிகள் தேவஸ்தான மடாதிபதியை அணுகி அவர் கால்களில் விழுந்து வேண்டிக் கேட்டுக் கொண்டோம். எங்கள் இனத்தவருக்கான சத்திரம் இருக்கும் இடத்தைக் கூடக் கல்லூரிக்காகக் கொடுத்துவிடச் சம்மதித்தோம். ஆனாலும் இதுநாள் வரை ஒரு பயனும் கிடைக்கவில்லை.

"நாங்கள் என்ன தனிப்பட்ட முறையில், 'எங்களுக்கு இந்தச் சலுகை கொடு! அந்த மானியம் கொடு!' என்று கேட்கிறோம்! இல்லையே! இலவச ஹாஸ்டல் வசதியோடு எங்கள் மாவட்டத்தில் ஒரு நாதஸ்வர இசைக் கல்லூரி வேண்டும் என்று தானே கேட்கிறோம்!

"எந்த ஒரு விழா, விசேஷம் என்றாலும் எங்களுடைய மங்கல வாத்தியம் தான் முதலில் முழங்கும். வானொலியிலும் அப்படித்தான். ஆனால் நமது அகில இந்திய வானொலியில் எல்லா இசைக் கலைஞர்களுக்கும் நிலைய வித்வான் பதவிகள் இருக்கின்றன. ஆனால் நாதஸ்வரம், தவிலுக்கு மட்டும் நிலைய வித்வான் பதவி இல்லை. பலமுறை கோரிக்கை விடுத்தும் பயனில்லை. ஒருவேளை நாதஸ்வர, தவில் வித்வான்கள் அனைவரும் பிற்படுத்தப்பட்டவர்களாக இருப்பதால்தான் மதிக்கப் படுவதில்லையோ என்று கூடச் சிலர் சந்தேகப்படலாம். ஆனால் அது உண்மையில்லை. பாண்டிச்சேரி — சென்னையிலிருந்த, இருக்கிற அகில இந்திய ரேடியோவின் உயர் அதிகாரிகள் பலர் பல முறை எடுத்துச் சொல்லியும் புது தில்லி காதில் போட்டுக் கொள்ளாததுதான் காரணம். என்ன பாவம் செய்தோம்?" என்று மிகவும் நொந்து போன உள்ளத்தோடு குறைகளைக் கொட்டித் தீர்த்தார்கள், சங்கத்தின் பொதுச் செயலாளர் டி. கே. எஸ். கணேசனும் மற்ற இசைக் கலைஞர்களும். பாவம்! அந்த ஏழைக் கலைஞர்களால் வேறு என்ன செய்ய முடியும்?

* கல்லூரிக்காக இந்த இசைக் கருவிகளும் கூடக் காத்திருக்கின்றனவோ!



* கணேசன்

— எஸ். சந்திரமௌலி

அட்டையில்: நம்மைச் சந்தித்த இசைக் கலைஞர்கள்.

வாசகர் பட்டி மன்றம் — 3

# மாத நாவல்கள் என்ன செய்கின்றன?

**வாசகர் தீர்ப்பு**

| | |
|---|---|
| மாத நாவல்கள் மக்கள் ரசனையை வளர்க்கின்றன | 18% |
| மாத நாவல்கள் மக்கள் ரசனையைக் கெடுக்கின்றன | 82% |

## ரசனையை வளர்க்கின்றன; முதல் பரிசு வாதம்!

இலக்கியங்கள் மக்களுக்கு வாழ வழி காட்டுகின்றன. வாழ்க்கையில் எதிர்ப்படும் சோதனைகளை — சந்திக்க வேண்டிய சிக்கல்களைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவற்றை வெல்லும் வழியையும் மீளும் வகையையும் உணர்த்துகின்றன.

அந்த வகையில் —

இந்நூற்றாண்டின் இலக்கியங்கள் நாவல்களே! இந்த நாவல்களைச் சாமானியர் பத்திரிகைத் தொடர்கதைகளில் மட்டுமே படிக்கக் கூடிய நிலை ஒரு காலத்தில் இருந்தது. காரணம் நாவல்களின் இமாலய விலை. வாங்கக் கூடிய வக்கிருந்தவர்கள் கூட திரைப் படத்திற்குப் பத்து ரூபாய் செலவழிக்கத் தயாராக இருந்தார்களே தவிர பத்து ரூபாய் பணம் தந்து நாவல்களை வாங்கிப் படிக்க அவர்கள் தயாராயில்லை. இந்நிலையில் ஜனித்தவைதான் மாதாந்திர நாவல்கள். ஒரு ரூபாய் ஒன்றரை ரூபாய்களுக்கு மாதம் தோறும் நாவல்கள் புற்றீசலாய் வெளிவரத் தொடங்கியதும் — லட்சக்கணக்கான சாமானியரும் — பத்திரிகை வாங்குவது போல் நாவலும் வாங்கிப் படிக்கத் தொடங்கினார்கள். மாதாந்திர நாவல்கள் மக்கள் ரசனையை வளர்க்கத் தொடங்கின.

ஒரு காலத்தில்வெறும்இரண்டாயிரம் பிரதிகள் அச்சடிக்கப்பட்ட நாவலைக் காசாக்குவதற்குள் பட்டபாடு... அம்மம்மா... இன்றோ பல லட்சம் பிரதிமாத நாவல்கள் மாதம் தோறும் விற்பனையாவதில் இருந்தே மக்கள் ரசனையை மாதாந்திர நாவல்கள் எத்தனை வேகமாக வளர்த்துள்ளனவென்பது புலனாகும்.

இதில் ஒரு — ஒரே ஒரு குற்றச்சாட்டு — மாதாந்திர நாவல்கள் மர்மக்கதைகளாகவும், வெறும் செக்ஸ் நாவல்களாகவும்தான் மக்களைச் சந்திக்கின்றன! இந்த ரசனை தேவையா?' — என்பது. இதில் ஓரளவு உண்மை இருந்தாலும் தரமான கதாசிரியர்களின் தரமான கதைகளையும் ஒரு ரூபாய் காசில் வாங்கிப் படிக்க முடிகிறதே! உயர்ந்த ரசனை உள்ள நாவல்களும் எத்தனையோ வந்து கொண்டுதான் இருக்கின்றன. இடையே மேற்சொன்ன களைகள் முளைக்கின்றன. களைகளைக் காலம் களையும். எவற்றினும் மாதாந்திர நாவல்கள் மக்கள் ரசனையை வளர்ப்பதை அதன் பல லட்சப் பிரதி விற்பனைகளே உணர்த்தவில்லையா?

— புலவர் சி. இரா. சாரநாத், மதுரை.

மாதாந்திர நாவல்கள் மக்களின் ரசனையைக் கெடுக்கின்றன என்பதை என்னால் ஒத்துக் கொள்ள முடியாது.

பார்ப்பதில், கேட்பதில், ரசிப்பதில் ஆகிய விஷயங்களில் மக்களின் ரசனை கெடாமல் வளரும்போது ஒரு மாதாந்திர நாவல் படிப்பதிலா ரசனை கெட்டுவிடப் போகிறது?

— அபிராமிதாசன், சென்னை

ஐந்து வருடங்கள் காத்திருந்து எழுதப்படுகின்ற ஒரு நாவ லும் தரமில்லாமல் போகலாம். அவசரமாக எழுதப்படும் பல நாவல்களும் தரத்துடன் விளங்கலாம். அது

எழுதுகின்றவரின் திறமையை — கற்பனையைப் பொறுத்தது. இன்றைய காலம் ஒரு பரபரப்பான காலம். மிக ஆழமான கருத்தைக் கூட மிக எளிமையாகவும் — சுருக்கமாகவும், வேகமாகவும் கூற வேண்டிய கட்டாயம் தோன்றியிருக்கிற அவசரமான காலம். எனவே அதனை நிறைவு செய்வது போல மாத நாவல்கள் வெளிவருவதால் மிகுந்த ஆதரவினை மக்களிடத்தில் பெற்று வருகின்றன.

— வெ. பாண்டுரங்கன், சென்னை.

இன்றைய மக்கள் உழைப்பு, உணவு என்ற சிறிய வட்டத்தினுள் சுழல விரும்புவதில்லை. அவர்களுக்கு வாழ்க்கையில், 'பொழுது போக்கு'' அவசியமாகிறது. அதைக் குறைந்த செலவில் அளிக்கின்றன மாதாந்திர நாவல்கள். தவிர வீரம், துணிவு, அன்பு, பாசம், கருணை என்று பல உயர்ந்த உணர்வுகளை வளர்த்துக்கொள்ள நாவல்கள் உதவும். விஞ்ஞானக் கற்பனைகள், அறிவியல் ஆர்வத்தைத் தூண்டும். துப்பறியும் நாவல் சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது. மனிதனின் வாழ்வில் நாவல்கள் நல்ல திருப்பங்களைக் கொண்டு வந்ததற்குப் பல சான்றுகள் உள்ளன.

— சண்முகத்தாய், இராஜபாளையம்.

வாசகர்களின் கலைப்பசிக்கு விருந்து கொடுக்கின்றன. குடும்பப் பிரச்னைகளை அலசும் நாவல், மர்மம் இழையோட மயிர்க் கூச்செரியும் துப்பறியும் நவீனம், செக்ஸ் அபிமானிகளுக்குத் தீனி போடவென்றே உள்ள நாவல், என்னவென்றே புரியாத, ஏதோ எழுதித் தீர்க்கிற ஏனோ தானோ எழுத்தாளர்களுக்குவாய்ப்பளிக்கவென்றேவெளி வருகிற நாவல்கள், இவற்றின் ஊடே செந்தமிழில் இலக்கிய மணம் வீச எழுதுகின்ற ஆர்வமிக்க எழுத்தாளர்களின் அத்திப் பூப் போன்ற நவீனம், வாசகர்களின் வித்தியாசமான ரசனைகளுக்கு இந்த மாத நாவல்கள் வரப்பிரசாதமே.

— வி. உமா, சென்னை.

இம்மாதிரி நிறைய மாதாந்திர நாவல்கள் வெளிவருவதால்தானே.. உங்களுக்கு ஒரு சுவையான... கார... சாரமான... பட்டிமன்றத்திற்கு ஒரு தலைப்பு கிடைத்தது...! வாசகர்கள் சிந்தனையையும்... தூண்டி விட முடிந்தது...! இதுவே ஒரு 'பிளஸ் பாயிண்டு' தான்...!

— ஈ. விஜயசாந்தி, கடலூர்.

**ரசனையைக் கெடுக்கின்றன;**
**முதல் பரிசு வாதம்!**

மாதாந்திர நாவல்: நாவலுக்குரிய வளைவு நெளிவுகள் இன்றியும், ஒரே கோட்டில் செல்லும் சிறுகதைப் பாணி இன்றியும் இரண்டாங்கெட்டான் நிலையில் உள்ள ஓர் அவசரப் படைப்பாகும். வலுவான குணாதிசயங்களை இதில் வரும் கதா பாத்திரங்கள் இடையே காண முடிவதில்லை. பல கோணங்களில் படைக்கப்படும் பாத்திரங்கள் தனித்தனியாக இயங்கிப் பலசிக்கல்களுக்கிடையே விறுவிறுப்பினை ஊட்டி, கடைசியில் குழப்பங்கள் நீங்கி மனத்தில் நிற்கும் அம்சங்கள் ஏதும் இதில் இல்லையே! கல்கியின் சிவகாமியும், ஜெயகாந்தனின் கங்காவும் நம்மிடையே ஏற்படுத்திய சலனங்களை இதில் காண முடியாது. மலிவான விலையில் பொழுதைக் கழிக்க அரை நிர்வாணப் படங்களுடன் கவர்ச்சிப் பெயர் ஏந்திக் கடைகளில் ஈசல்கள் போல் மொய்த்துக் கிடக்கின்றன.

நாவல்களிலும், தொடர்கதைகளிலும் தம் கற்பனையைச் செலவழித்த சில புகழ்மிக்க ஆசிரியர்களின் அரை வேக்காடுப் படைப்புக்களாகவிளங்குகின்றன மாதாந்திர நாவல்கள். பெரும்பாலான இந்த நாவல்களின் கரு புதிய கலாசார உலகின் தாரக மந்திரமான 'எங்கும் செக்ஸ்... எதிலும் செக்ஸ்' தான். இறக்குமதி செய்யப்பட்ட மேலை நாட்டு சரக்கான 'டெஸ்ட் டியூப் பேபி' 'பாய் ஃப்பிரெண்ட்' 'மர்டர் இன் கோல்ட் பிளட்' போன்றவை இதில் வேண்டிய அளவு கலக்கப்படுகின்றன.

இலக்கிய சரித்திரத்தில் மைல் கல்லாக விளங்கும் நாவலின் பெயரையா இந்த மாத இதழுக்கு வைப்பது? ஒரு வாசகரின் பணிவான வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து உரியவர்கள் இதனை 'மசாலா மாத இதழ்' என்று பெயர் மாற்றம் செய்வார்களா?

— ந. தியாகராஜன், சென்னை.

மனிதமனத்திலிருக்கும்அழுக்குகளையெல்லாம்தோண்டியெடுத்துவெளிச்சம்போட்டுக் காண்பித்து, நம்மையே நாம் வெறுக்கும் படி செய்கின்ற மாதாந்திர நாவல்களைப் படித்துப் படித்து மக்களின் ரசனை மிகவும் கீழ்த்தரமாகியிருக்கிறது. இப்படியே போனால், கொஞ்ச நாட்கள் கழித்து, உயர்ந்த இலக்கியத்தை மக்கள் முன் வைத்தால், 'நாம் வழக்கமாகப் படிப்பதிலிருந்து முற்றும் மாறுபட்டிருக்கிறதே? ஒருவேளை இது இலக்கியமே இல்லையோ என்னவோ! இதை நாம் படிக்காமலிருப்பதே நல்லது' என்று மக்கள் நினைக்கும் சாத்தியக் கூறு இருக்கிறது.

— ஆர். வசந்தா, திருவனந்தபுரம்

தனது அமைப்பாலும், உள்ளடக்கத்தாலும், காலநீட்சியாலும் சற்றுக் கௌரவமாய் வரவேண்டிய வரலாற்று நாவல் கூட, மாதாந்திரத்தில் மலிந்து போய், அதற்குரிய ரசனையிலிருந்து வெகுவாகத் தாழ்கின்றன.

இதில் வேடிக்கை என்னவெனில், மாதம் தவறாமல் வந்து குவியும், சில வாடிக்கை வாசகர்களின் பாராட்டுக் கடிதங்களை நிறுவனங்கள் வெளியிட்டு, தங்கள் தொண்டை நியாயப்படுத்துவதுதான்!

— எஸ். ஜோசப்ராஜ், பாண்டிச்சேரி.

ஒரு நாவலைப் படித்தவர் ஆழமான, நீண்ட நாள் நிற்கும்படியான ஒரு பாதிப்பைப் பெறவேண்டும். நாவல், படிப்பவரின் வாழ்க்கைக்கு ஒரு திருப்புமுனையாகக் கூட இருக்க வாய்ப்பிருக்கிறது. அவ்வாறு ஏற்படுங்காலே அந்த நாவலின் நோக்கமானது நிறைவேறியதாகக் கருத முடியும்.

ஆனால் தமிழில் தற்போது வரும் பெரும்பான்மையான மாதாந்திர நாவல்களை நோக்குங்கால் அவை மேற்கூறியவற்றுடன் ஸ்நானப்ராப்தி கூட இருக்கக் கூடாது என்று அந்த எழுத்தாளர் சத்தியம் செய்துவிட்டு எழுதுகிருரோ என்ற எண்ணமே தோன்றுகிறது.

— எஸ். வி. வெங்கடேசன், கோவை.

சமூக விழிப்புணர்ச்சிக்கு ஏதுவாகி, உயரிய சிந்தனைப் போக்கை உருவாக்கும் சர்வ வல்லமை பொருந்திய எழுத்துத் துறை பிழைப்புச் சித்தாந்தவாதிகளின் கையில் சிக்கிச் சீரழிந்து, வாசகர்களின் கீழ்த்தர ரசனைகளோடு சமரசம் செய்து கொண்டு திரிவதைப் பார்க்கும்போது; இன்று எல்லாத் துறைகளிலும் ஏற்பட்டிருக்கும் சீரழிவு இலக்கியத் துறைக்கும் நேர்ந்துவிட்டதோ என எண்ணத் தோன்றுகிறது. 'வயிற்றுப் பாட்டுக்குத்தான் எழுதுகிறேன்' என்று சொல்லிக் கொள்ளும் எழுத்தாளர்களை மறுவாழ்வு மையங்களுக்கு அனுப்பி வைக்க வேண்டும். எழுத்துலகில் புகுந்து இலக்கியத்தைக் கொச்சைப்படுத்த அவர்களை அனுமதிப்பது, நம் அனைவரையுமே மனநோயாளிகளாக மாற்றி விடும்.

— கௌதமன், திருச்சி.

இந்த நாவல்களின் இடையிடையே — கிளப்டோமேனியா, நிம்போமேனியா என்று சில பாத்திரங்களின் குணாதிசயங்கள் சொல்லப்படும். ஆனால் முறைப்படியாக அந்த 'மேனியா' கொண்டவர் எப்படியெல்லாம் செயல்படுவார் என்று விவரிக்கப்பட்டிருக்காது.

மொத்தத்தில் சமுதாயப் பொறுப்பு சிறிதும் இல்லாமல் அரை வேக்காட்டுத் தனமாகத்தான் இப்போது வரும் மாத நாவல்கள் எழுதிக் குவிக்கப்படுகின்றன.

அழகு செய்யப்பட்ட உண்மைகள்தான் மக்கள் ரசனையை வளர்க்கும். மாத நாவல்கள் பெரும்பாலும் உண்மைகளைக் கொச்சைப் படுத்திக் கொண்டு இருக்கின்றன. ஆகவே, அவை மக்கள் ரசனையைக் கெடுத்து வருகின்றன.

— ப. பாக்கியவதி, சென்னை.

புகைப்படம்: மணி

# மாதம் ஒரு மாவட்டம்

நினைவுபடுத்துகிறோம்!

கோயமுத்தூர்க்காரர்களுக்கு



கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் ஒன்பதாவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது கோயமுத்தூர் மாவட்டம்தான். எனவே, கோயமுத்தூர் மாவட்டத்திலுள்ள குறைகளும், அநீதிகளும் முறையீடுகளும் தவிர, பெரும் சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.9.86.

உடனே எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்

பி. கு: இப்போது நமது பிரதிநிதிகள் காமராஜர் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கிருர்கள். அவர்கள் சேகரித்துக் கொண்டு வரும் பரபரப்பான செய்திக் கட்டுரைகளும், பேட்டிகளும், புகைப்படங்களும் அக்டோபர் மாதக் கல்கி இதழ்களில் வெளிவரும்.



* இதுதான் நீதிமன்ற வராந்தா

# நீதி கேட்கும் நீதி மன்றம்!

தன் பெயரை அமீனா மூன்று முறை காற்றில் சிதற விடுவதற்குள் இந்த நான்கு அடி அகலமுள்ள வராந்தாவில் நெருக்கியடித்து நிற்கும் வழக்காடிகளின் வியூகத்தை எப்படி உடைத்துக் கொண்டு ஆஜர் கொடுப்பது என்று ஜெனரல் சுந்தர்ஜி போல் திட்டம் தீட்டிக் கொண்டிருக்கும் அய்யாசாமிகள்; அஞ்சலை அம்மாக்கள்!

'நீதிமன்றப் பொதுவரங்கில் நடக்கும் வழக்குகளைப் பார்வையிடுவதற்குப் பொது மக்களுக்கு உரிமை உண்டு' என்று உரிமையியல் நடைமுறைச் சட்டம் வழி காண்பித்துள்ளதே! இங்கே வழி எங்கே? உட்கார வசதி எங்கே? என்று அழைப்பாணைகளின்படி வந்து அலைமோதும் அரசு அதிகாரிகள்; வங்கி ஊழியர்கள்!

''எந்த நாற்காலி எப்போது காலியாகும்?'' என்று கவனமாய்ப் பார்த்துக் காலியானவுடன் விரைந்து சென்று உட்கார்ந்து, ''மியூஸிகல் சேர்'' விளையாடும் களிப்பில் ஆயாசப்படும் வழக்குரைஞர்கள்!

இத்தனை களேபரங்களிலும் தங்களுடைய கடமைகளில் கருத்தோடு பணிபுரியும் நீதிபதிகள்; நீதிமன்ற அலுவலக ஊழியர்கள்.

இந்தக் கல்யாண குணங்களைத் தன்னுள் கொண்டு செயல்படும் நீதிமன்றக் கட்டடம் எங்கேயிருக்கிறது? மாவட்டத்திலேயே அதிக அளவு வழக்குகள் தாக்கல் செய்யப்படும் விருத்தாசலம் உரிமையியல் மற்றும் சார்பு நீதிமன்றங்களின் கட்டடத்தில் நாம் அன்றாடம் காணும் காட்சிகள்தான் இவை.

விருத்தாசலம் மாவட்ட உரிமையியல் நீதிமன்றம் காற்றோட்டமும் வெளிச்சமும் நிறைந்த தனது சொந்தக் கட்டடத்தில் சௌகரியமாய் அமர்ந்து நீதி பரிபாலனம் செய்து வருகையில், ஒரு காலைப் பொழுதில், நீதிமன்றப் பொதுவரங்க மேற்கூரையிலிருந்து மங்களூர் ஓடு ஒன்று சறுக்கி விழுந்து தற்கொலை செய்து கொண்டது. உடனே காலி செய்ய வேண்டும் என்று கோரினோம்.

அரசு, கோப்புகளை அங்குமிங்கும் நகர்த்திக் கொண்டிருந்த போது, சொந்தக் கட்டடத்தை ஒப்பந்தக்காரர்களுக்குக் கூறு போடவும், காலி மனையைப் பொது மக்களுக்குத் திறந்த வெளிக் கழிப்பிடமாகவும் ஒப்புக் கொடுத்து ஒரு வாடகைக் கட்டடத்தில் பதினொரு ஆண்டுகளுக்கு முன் ஒண்டுக் குடித்தனம் ஏறியது முன்சீப் கோர்ட்.

ஒண்டுக் குடித்தனத்தில் தன் தங்கை முன்சீப் கோர்ட் படும் கஷ்டத்தில் பங்கு பெறத் தீர்மானித்த அக்காக்காரியான சார்பு நீதிமன்றமும் ஒண்டுக் குடித்தனத்தில் ஒன்றாய்க் குடியேற — வழக்காடிகளின் எண்ணிக்கை பெருகப் பெருக வராந்தா பிதுங்கியது.

போதிய காற்றோட்டமும், வெளிச்சமும் இல்லாத ஆரோக்கியமற்ற சூழ்நிலையால் பாதிக்கப்பட்டு, மூத்த வழக்குரைஞர் ஒருவர் மயங்கி விழுந்தது உண்டு. சாட்சிக் கூண்டிலேயே மூச்சை நிறுத்திய முதியவர் ஒருவரும் உண்டு. செஷன்ஸ் கேஸ் ஆரம்பித்தால் லாரியிலிருந்து சாரி சாரியாய் இறங்கும் குற்றவாளிகளுக்கு உட்கார வசதி செய்து கொடுக்க, உதவி செஷன்ஸ் நீதிமன்ற அரங்கு முழுவதையும் காலி செய்து எதிரிகளை (குற்றவாளிகளை)த் தரை டிக்கெட் பாணியில் உட்கார வைத்து வழக்குகள் நடத்த வேண்டிய நிர்ப்பந்தங்கள். வக்கீல் குமாஸ்தாக்கள் உட்கார்ந்து எழுத இடமில்லாமல் படும் அவதி சொல்லி மாள முடியாது.

அறிஞர் அண்ணாவுக்கு அடுத்தபடியாக முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களுக்கு 1979 ஆம் ஆண்டு பாராட்டுப் பத்திரம் வாசித்துப் புதிய கட்டடக் கோரிக்கையை முன் வைத்தது வழக்குரைஞர் சங்கம். திமர் காப்பி, திமர் புளியோதரை போல, திடுதிப்பென்று மேடையிலேயே ஏழரை லட்சம் ரூபாய்ச் செலவில் புது நீதிமன்றக் கட்டடம் கட்டித் தரப்படும் என்று உரத்த குரலில் சொல்லிக் கைதட்டல்களைப் பெற்றுக் கொண்டார் முதல்வர். காரியம்தான் கைகூடவில்லை. விருத்தாசலத்திற்கு அக்கம் பக்கத்திலுள்ள ஹைவேஸ்களில் பறக்கும் அமைச்சர்

பெருமக்களுக்குக் கூடப் பலமுறை சந்தன மாலைகள் போட்டுப் பார்த்தாகி விட்டது. மனு மேல் மனுவாகத் தபாலிலும் அனுப்பப் பட்டுவிட்டது! அதனால் அடுத்த தெரு தபால் தந்தி அலுவலகம்தான் கணிசமான அளவுக்கு வளப்பட்டதே தவிர, புதுக் கட்டடம் வந்த பாடில்லை!

நீதிமன்றத்தின் இட நெருக்கடியால் அடுத்த வீட்டு அம்மியில் அரைபடும் மசாலாக்கள், சாட்சிகளின் கண்களை எரிய வைக்க, பக்கத்து வீட்டில் காலை நேரத்தில் துவைபடும் துணிகளிலிருந்து தெறிக்கும் நீர்த் திவலைகள் காற்றில் மிதந்து வந்து கட்டுகளை நனைக்க, எதிர் வீட்டுக் குடும்பச் சண்டையில், வழக்குரைஞர்களின் வாதுரைகள் பின்னுக்குத் தள்ளப்பட..... இதுபோன்ற பல பாதகங்கள் இருந்தாலும் உள்ள சில சாதகங்களையும் குறிப்பிடாமல் இருக்க முடியாது!

உதாரணமாக நாலு செண்ட் நிலத்துக்குச் சண்டை போட்டு வந்த சகோதரர்கள், நான்கு மாதங்களாய்க் கூட்ட நெரிசலில் நெரிபட்டுக் கொண்டு நெருங்கி நின்றதால், பரஸ்பரம் பேசத் தொடங்கிச் சமாதானம் ஆகி, சொல்லிக் கொள்ளாமலேயே தலை மறைவானதுண்டு. விவாகரத்துக் கோரிய கணவனும், கண் கலங்கி நிற்கும் மனைவியைக் க்ளோசப்பில் பார்த்து மனம் திருந்தி, சப்தமில்லாமல் ஒன்றாய்ப் பஸ் ஏறிப் போனதுண்டு. உட்காரக் கூட இடமில்லை என்று வெறுத்துப் போய் வழக்குப் போடாமல் ஊரிலேயே பைசல் செய்யும் ஆசாமிகளும் உண்டு.

இப்போது புரிந்ததா? எதற்கு அரசு, நீதி மன்றங்களுக்குப் புதுக் கட்டடம் கட்டித் தருவதில்லையென்று! தேங்கிக் கிடக்கும் வழக்குகளைத் தீர்த்து வைக்க எப்படிச் செயல்படுகிறது என்று. சே..., அரசின் இந்த நல்ல எண்ணத்தை மற்றவர்கள்தான் சரியாகவே புரிந்து கொள்ள மாட்டேனென்கிறார்கள்.

— ஜி. பாலச்சந்திரன்

# இப்படியும் சில அதிகாரிகள்!

கடந்த 1960 — களில் இனாம் கிராமமாக இருந்த பலவற்றை ரயத்வாரி கிராமங்களாக மாற்றினார்கள். அதாவது அந்தந்த நில அனுபவதாரர்களுக்கெல்லாம் பட்டா வழங்கினார்கள். இந்த நடவடிக்கை கள்ளக்குறிச்சி தாலுகாவிலுள்ள எஸ். குளத்தூர் கிராமத்திலும் எடுக்கப்பட்டது!

ஆனால், அப்படிப் பட்டா வழங்குவதற்காக நடைமுறை விசாரணை நடத்தப்பட்டதில் ஒரு குழப்பம்! ஆர். கணபதி ஐயர் என்பவருக்குச் சொந்தமான 1.7 ஹெக்டேர் நிலத்திற்குப் பட்டா கொடுக்க அவர் இறந்து போய் விட்டதால், யாரை அழைத்து விசாரணை செய்வது? அவர் மனைவி பார்வதியைத்தான் விசாரித்திருக்க வேண்டும். ஆனால், அதிகாரிகள் முத்துலட்சுமி என்ற பெண்மணியை அழைத்து, 'உங்கள் கணவர் பெயர் கணபதி ஐயர்தானே?' என்று விசாரித்திருக்கிறார்கள்.

'ஐயோ! என் கணவர் பெயர் ராமகிருஷ்ண ஐயராயிற்றே!' என்று அந்தப் பெண்மணி பதறியபோது கூட அதிகாரிகள் தங்கள் தவறை உணரவில்லை. மாறாக கணபதி ஐயர் என்று ரெகார்டுகளில் இருந்த இடங்களிலெல்லாம் ராமகிருஷ்ண ஐயர் என்று திருத்தி முத்துலட்சுமி என்ற அந்தப் பெண்மணிக்கே பட்டா கொடுத்து விட்டார்கள்!


குப்புசாமி

கணபதி ஐயரின் வாரிசான அவர் மகன் குப்புசாமி நெய்வேலியில் வேலை பார்ப்பதால் இந்த விஷயம் நீண்ட காலத்திற்குத் தெரியாமல் போய்விட்டது. தெரிய வந்தபோது பதறியடித்துக் கொண்டு ஓடி, முத்துலட்சுமி அம்மாளிடம் விஷயத்தைக் கூறி விளக்கிய போது, அந்தப் பெண்மணியும் உண்மையை உணர்ந்து கடந்த 26.11.73 அன்று குப்புசாமியின் பெயருக்குப் பட்டாவை மாற்றிக் கொடுத்து விட்டார். நிம்மதிப் பெருமூச்சு விட்டார் குப்புசாமி!

பிறகு, 85 இல் முன்பு கொடுத்த பட்டாக்களைப் புதுப்பிக்க வந்த அதிகாரிகள் குழு, 73 இல் குப்புசாமியின் பெயருக்குச் செய்யப்பட்ட பட்டா மாறுதலைக் கவனத்தில் கொள்ளாமல், மறுபடியும் பழையபடி முத்துலட்சுமி அம்மாளுக்கே பட்டா கொடுத்துவிட்டுச் சென்றுவிட்டது!

— இந்தக் கதைகளையெல்லாம் விரக்தியும் வேதனையும் கலந்த குரலில் பாதிக்கப்பட்ட குப்புசாமியே நம்மிடம் கூறி முறையிட்டார். நமது அரசு அதிகாரிகளின் நிர்வாகத் திறமை எப்படி?

மீண்டும்
மேனி மெருகுக்கு
ரெக்ஸோனா

மின்னி மிளிரும் மேனி...எந்நாளும்
உங்கள் பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா
(தேவதாரம்) ஆகிய நாலு வகை
இயற்கைத் தைலங்களின் நற்கலவையான
ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு
இயல்பான வழியாகும்.







# ரெக்ஸோனா

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 91 2416 TM

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

## 8

இருளில் நனைந்து கொண்டிருந்தது நாகராஜனின் பங்களா.. வெளிச்சத் துண்டுடன் விரைந்து வந்து நின்றது சுகுமாரின் மோட்டார் பைக். பீடி கொளுத்தப் போன வாட்ச்மேன் சுந்தரம் காரியத்தை ஒத்திப் போட்டு, கதவை பைக் நுழையும் அகலம் திறந்து வைத்தான்.

இன்ஜினை அணைத்துவிட்டு, வேகத்தின் மிச்சத்தில் ஓசையின்றிச் சறுக்கிப் போர்ட்டிகோவில் அம்பாசிடரைத் தொந்தரவு செய்யாமல் நிறுத்தினான். கட்டிப் போடப்பட்டிருந்த நாய் வள் என்றதற்கு பூட்ஸ் காலால் இடுப்பில் உதை வாங்கிக் கொண்டு சுருண்டு கொண்டது.

கதவைத் திறந்த மாயா, ''உன்னைத்தான் எதிர்பார்த்துக்கிட்டிருக்கேன் சுகுமார்'' என்றாள். சைலன்ஸர் பொருத்தின வார்த்தைகள்.

உள்ளே வந்து, ''நிறைய நேரமிருக்கு மாயா, மச்சான் படிக்கிறாரா?'' என்றான் சுகுமார்.

''ஆமாம்.''

''வீட்ல யாருமில்லையே....?''

''இல்லை. எல்லாரும் போயாச்சு.''

''பின் கதவு?''

''நான் திறந்து வச்சிருக்கேன். கொஞ்சம் கவலையா இருக்கு சுகுமார்.''

''என்ன கவலை?''

''எங்கேயாச்சும் பிசகிடாதே?''

''ம்கூம். ரொம்ப பர்ஃபெக்ட் பிளான் இது. ரெண்டு பாகம். முதல் பாகத்திலே நாகராஜன் மூச்சிழக்கிறார். ரெண்டாவதிலே அந்தப்பழியை அசோக்மேலபோடறோம். பாதுகாப்பான அலிபியோட நாம ரெண்டு பேரும் டாக்டர் கிளினிக்ல இருக்கப் போறோம் இந்தச் செயல்கள் நடக்கிறப்போ. ரெண்டு பகுதியுமே சரியா நிறைவேறிட்டா இரட்டை சந்தோஷம். ஏதாச்சும் கோளாறுகி, முதல் பகுதி மட்டும் தான் நடந்தா — அதிலேயும் நமக்கு லாபம்தான். தாமஸ் ஒரு மதயானை. சுலபமா சிக்கிட மாட்டான். இந்தக் கடைசி நிமிஷங்களிலே நீ கவலைப் படறது சரியில்லை மாயா.''

சுகுமார் ஹாலில் இருந்த ஃப்ரிஜ்ஜில் இருந்து குளிர்பானம் எடுத்து அதன் கதவில் பொருத்தித் திறந்து மடக், மடக் என்று குடித்தான்.

''அப்புறம் மாயா, வாசல்ல நாய் இருக்கிறதை மறந்துவிட்டேன். நாமக்கு அது இடைஞ்சல் தரலாம். என்ன செய்யலாம் அதை?''

"சிம்ப்பிள்" என்றாள் மாயா. ரெஃப்ரிஜிரேட்டர் திறந்து வெளிநாட்டு விஸ்கி பாட்டிலைக் கையில் எடுத்தாள்.

"சாப்பிடுமா?"

"பழக்கியிருக்கார்."

"கொடு. ஊத்திட்டு வர்றேன். பேரென்ன?"

"ஜின்னி" என்று நாகராஜனின் ரீடிங் ரூம் கதவை ஒருதரம் பார்த்துக் கொண்டு, "சீக்கிரம் சுகுமார்" என்றாள்.

சுகுமார் பாட்டிலுடன் வாசலுக்கு வந்து, ஜின்னியை நெருங்கினான். மற்றொரு உதையை எதிர்பார்த்து ஒதுங்கி நின்றது அந்தச் சோம்பேறி நாய். அருகே இருந்த பீங்கான் கிண்ணத்தில் பாதி வரை ஊற்றியதும்... ஆர்வமாய் அணுகி நாக்கைப் போட்டுப்புரட்டி நிமிடங்களில்காலி செய்துவிட்டு, 'வுய்க்' என்று வித்தியாசமாய் ஓசை எழுப்பியது. இப்படி, அப்படி கொஞ்ச நேரம் குதித்தது. சைடு வாக்கில் படுத்துக் கால்களை நீட்டிக் கொண்டு உணர்வு நீத்தது.

சுகுமார் உள்ளே வந்து பாட்டிலை வைத்துவிட்டு, கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு, "மாயா, நாம புறப்படறதுக்கு முன்னாலே ஒரு சின்ன டிராமா பாக்கி இருக்கு" என்றான்.

"என்ன?"

"சொல்றேன். கதவைத் தட்டி மச்சானைக் கூப்பிடு."

மாயா ரீடிங் ரூமின் கதவைத் தட்ட... கையில் ஆங்கிலப் புத்தகத்துடன் கதவைத் திறந்தார் நாகராஜன்.

"அண்ணன் வந்தாச்சா? புறப்படறீங்களா?" என்றார்.

"ஆமாங்க. அசோக் வருவார். இருக்கச் சொல்லுங்க. வந்துடறேன். மனம் விட்டுப் பேசுங்க."

சுகுமார் அவரைச் சமீபித்து, "தங்கச்சி கூட வேணும்னுதான் சொல்லிச்சு. நான் தான் சந்தேகத்துக்கு செக் பண்ணிக்கிறது நல்லதுன்னு சொன்னேன்." என்றான்.

"கரெக்டுதான். கார்லதானே போறீங்க?"

"ஆமாம். நான் பைக்கிலே வந்தேன். போய்ட்டு வந்து எடுத்துக்கறேன்."

"எவ்வளவு நேரமாகும் திரும்ப?"

"ஒன்பதரைக்கெல்லாம் வந்துடலாம். போகப் பத்து நிமிஷம். வரப் பத்து நிமிஷம். டாக்டர்கிட்டே கால் மணி நேரம்."

"அம்பாஸிடர்லே பிரேக் ஷார்ப்பா இல்லே. பார்த்து ஓட்டுங்க சுகுமார்."

"அதெல்லாம்நான் பார்த்துக்கறேன். இன்னொரு விஷயம் மச்சான். உங்க வாட்ச்மேன் சுந்தரம் நேத்து என்னை யாருன்னு கேட்டுத் தடுத்து நிறுத்திட்டான். எனக்கு அவமானமாப் போச்சி. எத்தனை தடவை வந்திருக்கேன். தெரியாதுன்னுட்டான். போராடி உள்ளே வர வேண்டியதாப் போச்சு."

"அப்படியா? முகம் மறந்திட்டான் போலிருக்கு."

"அதெப்படி மறக்கும்? நான் யாரு? உங்க மச்சான். ஒரே மச்சான். அவனுக்கு உடம்பு பூரா திமிரு. நீங்க இப்போ இங்கே கூப்பிட்டுக் கண்டிச்சி என்கிட்டே மன்னிப்புக் கேட்கச் சொன்னாதான் எனக்கு மனசு திருப்தியாகும்."

"அவ்வளவுதானே?" என்ற நாகராஜன் உள்ளே நடந்து இண்டர்காம் எடுத்து. எண் அழுத்தி, "சுந்தரம், கொஞ்சம் வந்துட்டுப் போ," என்றார்.

வந்த சுந்தரம் மரியாதை தூரத்தில் நின்று, "அய்யா," என்றான்.

"மச்சானை நேத்து நிறுத்திட்டியாமே?"

"முகம் மறந்துட்டேங்க."

"ரொம்ப தப்பு சுந்தரம். மன்னிப்புக் கேட்டுடு."

"நேத்தே கேட்டுட்டேங்கய்யா."

"ரெண்டாவது தடவை கேட்டுடு, பரவாயில்லே."

அவன் எச்சிலை விழுங்கிவிட்டு, சுகுமார் பக்கம் திரும்பி, "மன்னிச்சிடுங்க சார்" என்றான்.

சுகுமார் அலட்சியமாகப் பதில் சொல்லாமல் முகத்தைத் திருப்பி, "மாயா, வா போகலாம்" என்று வாசலுக்கு நடந்தான். காரில் மாயா அவனுக்கு அருகில் அமர... சுந்தரம் அவர்களுக்கு முன்னால் ஓட்டமாய் ஓடிக் கதவு திறக்க வேண்டியிருந்தது.

சாலைக்கு வந்ததும் கேட்டாள் மாயா:

"பொதுவா இந்த மாதிரி சின்ன விஷயங்களை நீ பெரிசு பண்ண மாட்டியே சுகுமார், எதுக்காகச் சுந்தரத்தைக் கூப்பிட்டு மன்னிப்பு கேக்கச் சொன்னே?"

"மண்டு! காரணமாத்தான். நான் சொல்லலே, நடக்கப் போற செயல்களுக்கு முக்கியமான சாட்சி இந்த சுந்தரம்தான். நீயும், நானும் வீட்டை விட்டு வெளியேறினப்போ நாகராஜன் உயிரோடத்தான் இருந்தார், கூப்பிட்டு மன்னிப்புக் கேக்கச் சொன்னார்ன்னு சத்தியம் பேசுவான் இவன். நிகழ்ச்சிகள் நாமவெளியேறினப்புறம்தான் நடந்ததுன்னு இவன் மூலமா போலீசுக்கு உறுதி செய்யறோம் நாம். புரிஞ்சுதா?"

"பரவாயில்லே சுகுமார். உன்னைக் கொஞ்சம் குறைச்சலாத்தான் மதிப்புப் போட்டு வச்சிருந்தேன். நல்லாதான் யோசனை பண்ணித் திட்டம் போடறே..."

கார் அந்த பிரைவேட் கிளினிக்கின் முன்னால் பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் வியாபாரம் நடத்தின கடலை வண்டிக்காரனுக்கு இரண்டு இஞ்ச் அருகாமையில் வந்து நின்றது.

அசோக் அணுகின மூன்று டாக்ஸிகளும் அசோக் நகர் வர மறுத்தன..

"வெறும் ட்ராப்புக்கு யாருய்யா அவ்வளவு தூரம் வர்றது?"

"வெறும் ட்ராப்புக்குத்தானே வர மாட்டே? ரைட். அரை மணி நேரம் வெய்ட் பண்ணி மறுபடி இங்கேயே கொண்டாந்து விட்டுடு. என்ன சொல்றே?"

"சரி, ஏறுங்க" என்றுன் பெரிய மனத்துடன்.

அசோக் ஏறி அமர்ந்து கொண்டு யோசித்தான். என் கோரிக்கைக்கு எந்தவிதமாக முடிவெடுத்திருப்பார் அப்பா? மாயாவின் வார்த்தைகள் எல்லாம் போலி. அன்பாவது, பாசமாவது... எல்லாம் வேஷம். பெரிய திட்டத்தோடுதான் வலது கால் வைத்திருக்கிறுள். வரவேற்பில் துப்பாக்கிச் சூடு நிச்சயமாக நாடகம். முள்ளைப் புல் என்று நம்புகிறுர் அப்பா. எப்படியோ போகட்டும். எனக்கு அநியாயம் இழைப்பதை எப்படிப் பொறுப்பது? பாதி சொத்து தந்தால் சரி. இல்லை என்றுல் நிச்சயமாக ஒரு நல்ல வக்கீலாகப் பார்க்க வேண்டியதுதான்.

இன்றைக்குக் கோபப்படப் போவதே இல்லை.

பாதி சொத்து தர முடியுமா? முடியாதா? — ஒரே கேள்விதான். அதில் மாற்றமே இல்லை. ஒரே வார்த்தையில் பதில் தேவை. கேட்டுக் கொண்டு புறப்பட்டு விட வேண்டியதுதான்.

டாக்ஸி அந்த பெட்ரோல் பங்கிற்குள் நுழைய... சிந்தனை சிதறி, வண்டி புறப்படும் வரை அருகே சுவரில் வரிசையாய்ப் படர்ந்திருந்த சினிமா போஸ்டர்களில் டைரக்டர்கள் பெயர்களைப் படித்தான் அசோக்.

**நா**கராஜன் தம் அறைக்குள் நடந்து கதவைச் சாத்திக் கொண்டு, வசதியான நாற்காலியில் அமர்ந்து கொண்டு செயின் முனையில் கழுத்தில் தொங்க விட்டிருந்த படிக்கும் கண்ணுடியை உயர்த்தி மூக்கில் உட்கார வைத்துவிட்டு, விட்ட வரியில் இருந்து படிக்க ஆரம்பித்தார்.

ஒரு பக்க சுவர் முழுக்க முழுக்கப் புத்தகங்களாக டிசைன் ஷெல்புகளில் நாற்பத்தைந்து டிகிரி கோணத்தில் சாய்ந்திருந்தன. அறையின் இரண்டு ஜன்னல்களின் கதவுகளும் உள்பக்கம் சாத்தியிருக்க... திரைச்சீலைகள் திரைச்சீலைகளாய் இருந்தன. குளிர்ப்பாட்டப்பட்ட காற்று தலை துவட்டிக் கொள்ளாமல் அறை முழுக்க அடம்பிடித்து ஓடிக் கொண்டிருந்தது.

நாகராஜன் அபாயங்களை எதிர்நோக்காமல் கதவுக்கு முதுகு காட்டி, அமெரிக்காவில் தொழிலாளர்களின் பிரச்னையைப் பற்றி ஏதோ நாவல் போல் சுவாரசியமாய்ப் படித்துக் கொண்டிருந்தார்.

**அ**ம்பாஸிடர் புறப்பட்டுச் செல்லும்



சப்தத்தைக் கேட்டதும், தாமஸ் பொழுது போகாமல் கடித்துக் கொண்டிருந்த புல்லைத் துப்பினான். நேரம் பார்த்தான். 8.30.

அசோக்கை வரச் சொல்லி இருப்பது ஒன்பது மணிக்கு. அவன் பத்து நிமிடம் முன்னதாகக் கூட வரலாம். எனவே, வினாடிகள் கூடத் தாமதிப்பது தப்பு.

இனி...

செயல்கள்! வேகமான செயல்கள்.

தாமஸ் இரண்டாவது எல்லையில் அந்தப் பங்களாவின் பின்புற காம்பௌண்ட் சுவரில் ஏறிவிட்டான். சுற்றிலும் கரிக் கிடங்கு போலக் கறுப்பு. உள்புறத்தில் இரண்டு மாமரங்கள். அவற்றின் பாதங்களில் உதிர்ந்த கிழ இலைகள். இவன் குதித்த போது வலியில் முனகிவிட்டு ஓய்ந்தன.

மெதுவாக நடந்தான்.

அகலமான கிணறு. அருகே மோட்டாருக்காக ஒரு குட்டி வீடு. அதற்கு ஆஸ்பெஸ்டாஸ் கிராப்பு. அதன்மேல் உதிர்ந்த ஒரு மரத்தின் சன்னக் கிளைத் துண்டு உருண்டு வந்து விழுந்த சப்தம் துல்லியமாகக் கேட்டது.

கிணற்றைச் சுற்றிக் கொண்டு நடந்தான். பங்களாவின் பின் கதவை நெருங்கு முன் தொட்டிகளில் நின்ற குரோட்டன்களின் நீளமான விரல்கள் இவன் உடம்பில் வருடுவதைத் தவிர்த்தான்.

அடைந்தான், இரட்டைக் கதவுகள். மெல்லக் கை வைத்துத் தள்ளி, நடுவில் ஒரு இன்ச் இடைவெளி ஏற்படுத்திக் கொண்டு ஒரு கண் பதித்துப் பார்த்தான். அடுத்தடுத்து மூன்று கதவில்லா நிலைகள் நேர் வரிசையில் தெரிய... மூன்றாவதில் வெளிநாட்டு மணி வரிசைகள் மெலிதாக அசைந்து கொண்டிருந்தன. அதைத் தாண்டி ஹால். ஹாலில் வெளிச்சமாய் இருந்தது.

தாமஸ் சட்டென்று இரண்டு கதவுகளையும் உள்புறம் தள்ளி உள்ளே வந்தான். கதவைச் சாத்தி ஓசையின்றித் தாழிட்டான். ஸ்லோ மோஷனில் நடந்து இரண்டு மினி ஹால்களைக் கடந்து மகா ஹாலின் நிலைப் பகுதிக்கு வந்து எட்டிப் பார்த்தான்.

வாசல் கதவு லேசாகத் திறந்திருந்தது. ரீடிங் ரூம் கதவு சாத்தியிருந்தது. ஹாலில் சோபாக்கள் ஒன்றையொன்று பார்த்துக் கொண்டிருந்தன. ரெஃப்ரிஜிரேட்டரின் மேல் வோல்டேஜ் ஸ்டெபிலைசர் சிவப்பாக நெற்றிக் கண் திறந்திருந்தது. மாடிப் படிகளின் துவக்கத்துக்கருகில் பிளாஸ்டிக் தொட்டியில் அந்தச் செடியின் வாழையிலை அகல இலைகள் மெதுவாக அசைந்தன. டைனிங் ஹாலுக்கும், கிச்சனுக்கும் போகும் பகுதியில் மார்பிள் தரையில் அந்தப் பூனை உறங்கிக் கொண்டிருந்தது.

தாமஸ் தனது பனியனுக்குள் கைவிட்டு எடுத்தான். நிதானமாக இரண்டு கைகளிலும் கிளவுஸ் அணிந்து கொண்டான். வாசல் கதவை அடைந்து சற்றுத் திறந்து வெற்று போர்ட்டிகோவைப் பார்த்தான். தூரத்தில் கேட்டுக்கு அருகே சிவப்புப் புள்ளி ஒளிர்ந்து அடங்குவதைப் பார்த்தான். சுந்தரத்தின் பீடி!

இன்னும் அசோக் வரவில்லை என்று நிச்சயம் ஆனதும் பாண்ட் பாக்கெட்டுக்குள் கைவிட்டு எடுத்தான். பட்டன் அழுத்தியதும் விர்க் என்று விரிந்தது அந்த ஆறு அங்குலக் கத்தி.

ரீடிங் ரூமை மெதுவாக அணுகினான். ஒற்றைக் கதவு, கைப்பிடியைக் கீழ் நோக்கி அழுத்தினால் திறக்கலாம் — உள்புறம் தாளிடாத பட்சத்தில்... உள்புறம் தாளிடப் பட்டிருக்கிறதா என்பதை அறிய... கைப்பிடியை மில்லிமீட்டர் மில்லிமீட்டராகக் கீழே இறக்கினான். உள்புறம் கதவைத் தள்ள முடிந்தது.

முன்போலவே இரண்டு இஞ்ச் மட்டும் தள்ளி உள்ளே பார்த்தான். இவனுக்கு முதுகு காட்டி அமர்ந்திருந்தார் நாகராஜன். இவன் நுழைவதற்குத் தேவையான அளவு திறந்து உள்ளே வந்ததை அவர் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

கத்தியை இறுக்கமாகப் பிடித்து... முன்னேறி, அவரை இரண்டடி தூரத்தில் சமீபித்து... சட்டென்று அவரின் மார்புப் பகுதிக்கு வசமாக முன்புறம் பாய்ந்து கையை உயர்த்தியவன் திகைத்தான்!

நாகராஜனின் மார்பில் ஏற்கெனவே ஒரு கத்தி ரத்தத் திலகமிட்டுக் கொண்டு கம்பீரமாக நின்று கொண்டிருக்க... திறந்திருந்த அவர் விழிகளில் சலனமில்லை.

(தொடரும்)

## காரணம்...



முக்கனிகளில் ஒன்றான பலாப் பழத்திற்கும், நிலக்கடலைக்கும் பெயர் போன ஊரான பண்ருட்டிக்கு அப்பெயர் எப்படி வந்தது? முற்காலத்தில் பாடல்களை இயற்றும் புலவர்கள் அங்கே அதிகமாக வாழ்ந்தனராம். அவர்கள் ஓலைச் சுவடிகளை உருட்டி, பண் (பாடல்) இயற்றியதைக் கருத்தில் கொண்டு இந்த ஊரை "பண் உருட்டி" என அழைத்திருக்கின்றனர். அப்பெயர்தான் திரிந்து தற்போது பண்ருட்டியாக திகழ்கிறது.

ஆதாரம்: ஹிஸ்டரி ஆஃப் தமிழ்நாடு

— தில்லை தமிழரசன்

# உலகத்தில் அனைத்திலும் மதிப்புள்ள அழகு சாதனம் வைட்டமின் E — அனுபவித்திடுங்கள் நீங்களும்.



வைட்டமின் E, இப்போது இந்தியாவிற்கு வந்துவிட்டது—உடனடியாக உபயோகிப்பதற்கும் வளமுள்ளதுமாக தயாரிக்கப்பட்ட மேனிக்குயின் ஸ்கின் ஆயில் வடிவத்திலே!. நவீன மருந்துலகின் அதிசயம் வைட்டமின் E என்று வர்ணித்துள்ளார் நோபில் பரிசு வெற்றியாளர் லினஸ் பாலிங்.

**இளமைக்கான எண்ணெய்—**
வைட்டமின் E மிகச் சிறப்பான அழகுச் சாதன திரவம்—வைட்டமின் Eயை வீரிய பொருளாகக் கொண்டுள்ளது. அது 'ஆண்டி ஆக்ஸிடென்ட்டாக' செயல்படுகிறது—உங்கள் சருமம் உட்பட பெரும்பாலும் ஒவ்வொன்றையும் தாக்கும் ஆக்ஸிஜனின் எதிர்ப்புச் சக்திகளுக்கு எதிரே சருமத்தை பாதுகாக்கிறது.

**சருமத்தின் விரிந்து சுருங்கிய தடங்கள் மற்றும் சருமப் புள்ளிகளை போக்குகிறது.**
சருமத்தின் மீதான புள்ளிகள், கர்ப்பத்தின் போது ஏற்பட்ட சருமத்தின் விரிவுத் தடங்கள், வயிற்று மடிப்புத் தடம், உடம்பின் மேலுள்ள தழும்புகள், முக அழகைக் கெடுக்கும் கோடுகள், சுருக்கம், சருமத்தின் உலர்வு வறட்சி ஆகியவற்றைப் போக்குவதற்கு விசேடமாக பயன்படுகிறது. மேனிக்குயின்ஸ்.

**வைட்டமின் E**
இலவசம்—விளக்கங்களுடன் கூடிய அனைத்து விபரங்களும் அடங்கிய ஃபோல்டர்—இது, கம்பெனியிடம் கேட்டுக் கொள்வதன் பேரில் கிடைக்கும்—தபால் செலவிற்கு 95 பைசா ஸ்டாம்ப் அனுப்பவும்.




மேனிக்குயின்ஸ் காஸ்மெடிக்ஸ்

mannequin's



ஆரோஹி மெட்-லேபோரேட்டரீஸ் பி. லி.,
1, பிரபாத் நகர், ஜோகேஷ்வரி (மே), பம்பாய் 400 102
டெலி: 351864.

**விற்பனைக்குவிடுப்போர்: ஹாப்பிஹோம் மார்க்கெட்டிங் சர்வீஸஸ் பிரைவேட் லிமிடெட், 7/30, நாராயண் ஆச்ரமம் 3 வது மாடி, டாக்டர் அம்பேத்கார் ரோடு, லால்பாக், பம்பாய்—400 012. போன்: 413664.**

# மவுண்ட்பேட்டன் ராவ்



**பே**ங்கின் பிற்பகல் வேளை. நான் ஸேவிங்ஸ் கவுண்டரில் அமர்ந்து, வவுச்சர்களை லெட்ஜரில் அந்தந்த அக்கவுண்டுகளின் பக்க இடுக்குகளில் செருகிக் கொண்டிருந்தேன்.

இப்போது நான் செய்து கொண்டிருக்கும் வேலை முடிந்ததும் இசைக் கச்சேரி ஆரம்பிக்கும்; அதிலும் இந்த பேங்கின் கவுண்டர் நல்ல இசைஞானம் கொண்ட மரத்தால் செய்யப்பட்டது. தட்டினால் மிருதங்கத்தை விடவும் நாதம் கணீரென எழும்பும். பக்கத்து ஸீட் ரவி பாட ஆரம்பிப்பான். அப்புறம் என்ன? பூஜாரியே வந்தாலும் எங்களை அசைக்க முடியாது.



இசைக் கச்சேரி ஆரம்பிக்க வேண்டிய வேளையில்தான், அந்தப் பையன் உள்ளே நுழைந்தான். நான் கடைசி லெட்ஜரில் வேலையை முடித்துச் சடாரென்று அதற்குரிய பொந்திற்குள் அடித்துச் செருகினேன்.

பையன் நேரே எனக்கு முன்னால் வந்து நின்றான். நான் அமர்ந்தபடி அவனைப் பார்த்தபோது, அவன் தலையை வெட்டி கவுண்டர் மேல் வைத்தது போலிருந்தது. விட்டலாச்சார்யா பாணியில் பேச ஆரம்பித்தது.

''ஜோஸ்யம் பார்க்கறீங்களா ஸார்...? நல்லா கைரேகை பார்ப்பேன் ஸார்... பெரிய பெரிய ஆளுங்களுக்கெல்லாம் பார்த்துச் சொல்லி பலிச்சிருக்கு ஸார்...''

நான் உடனே, 'எனக்கு ஜோஸ்யத்தில் நம்பிக்கை கிடையாது!' என்று சொல்லியிருந்தால், இந்தக் கதையே மேற்கொண்டு எழுத முடியாமல் போயிருந்திருக்கலாம்... விதி வலியது!

என் சக ஊழியன், பக்கத்தில் லாட்ஜில் குடியிருக்கும் ஒரு ஜோஸ்யன் பற்றிச் சொல்லியிருந்தான். அவனிடம் இருபத்தைந்து ரூபாயைக் கொடுத்தால், வரப் போகும் பெண்டாட்டியின் பெயர், அவள் குடியிருக்கும் திசை எல்லாம் துல்லியமாகச் சொல்வானும். ஆனால் அவ்வளவு ரூபாயைத் தூக்கிக் கொடுக்க விரும்பாமல், 'ஜோஸ்யத்தில் எனக்கு நம்பிக்கையில்லை... பெண்ணின் பெயரைத் தெரிந்து கொண்டு அந்தப் பெயராய்ப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டால்தான் ஜோஸ்யம் பலிக்கும்!' என்று அப்போது ஜோக்கடித்திருந்தேன்.

ஆனால் இந்தப் பையனுக்கு ஐந்து ரூபாயைக் கொடுத்தால் ஏதாவது சொல்ல மாட்டானா?

பையன் என் முகக்குறியை உணர்ந்து விட்டிருந்தான். தோளில் தொங்கிய பையிலிருந்து, கடிதங்களை எடுத்து என் முன்னே பரப்பினான்.

கனராபேங்கின் அஸிஸ்டெண்ட்ஜெனரல் மானேஜர், ஸ்டேட் பேங்க் மானேஜர் என்று கையெழுத்திடப்பட்ட கடிதங்கள். அதில், 'மவுண்ட்பேட்டன் ராவ் நல்ல ஜோஸ்யர்; நன்றாக கணித்துச் சொல்கிறார்; கைரேகை சாஸ்திர கெட்டிக்காரர்' என்று பாராட்டுக்கள்.



பையனைப் பார்த்தால் எனக்கு நம்பிக்கையே எழவில்லை. அதிகம் என்றாலும் வயது பதினைந்துதான் இருக்கும். இந்த வயதில் அட்லீஸ்ட் தன் கைரேகையையாவது பார்க்கத் தெரிந்திருக்குமா? பெயர் வேறு புதுமையாக இருக்கிறது!

"ஏம்பா, மவுண்ட்பேட்டன் ராவ் நீதானா?"

"ஆமா ஸார்..!" தொடர்ந்து, "கைரேகை பார்க்கறீங்களா?" என்றபடி ஐந்து ரூபாயிலிருந்து, இருபத்தைந்து ரூபாய் வரைக்குமான ஜோஸ்ய விகிதங்களை ஒப்பித்தான்.

நான் அப்பையனுடன் பேச ஆரம்பித்தது மற்றவர்களையும் ஈர்த்துவிட்டது.

"என்னப்பா, ஜோஸ்யம் பார்க்கப் போறியா?"

நான் 'ஆமாம்' என்று திட்டவட்டமாகச் சொல்வதைத் தவிர்த்து "அட, சும்மாத்தான் பாப்போமே... பொழுதும் போன மாதிரியிருக்கும்!" என்றபடி கவுண்டரிலிருந்து விலகிச் சுற்றி நடந்து வெளியில் வந்தேன்.

அதற்குள், நான் ஜோஸ்யம் கேட்கப்போகிறேன் என்று கேள்விப்பட்டு, ஒரு பொதுக் கூட்டம் சேர்ந்திருந்தது. அதிலும் ஒரு சின்னப் பையன் எப்படி ஜோஸ்யம் சொல்வான் என்கிற எதிர்பார்ப்போடும், அதைவிட முக்கியமாய் என்னைப் பற்றி என்ன சொல்லப் போகிறான் என்ற ஆவலோடும் இருந்தது.

எனக்கு தர்மசங்கடமாயிருந்தது. இந்தப் பையன் உண்மையிலேயே ஒரு நல்ல ஜோஸ்யனாக இருந்து என்னைப் பற்றின உண்மைகளைப் போட்டு உடைத்துவிட்டானென்றால்...?

பையன் என்னை மேற்கொண்டு யோசிக்க விடவில்லை.

"ஸார் பேரென்ன?"

சொன்னேன்.

"வயசென்ன?"

"நட்சத்திரம்?"

'சொன்னேன்'கள்.

பையன் மௌனமாயிருந்தான். பின்னர் "உங்களுக்கு வலது தோள் பட்டையில் ஒரு மச்சம் இருக்கணுமே!" என்றான்.

நான் அவனுடைய திறமையை வியந்து கொண்டே தோள்பட்டையில் மச்சம் இருக்கிறதா என்று தீர்மானித்துக் கொண்டிருந்தேன். தோள் பட்டையில் மச்சம் இருக்கிறது. ஆனால் அது வலதிலா அல்லது இடதிலா?

"என்னப்பா மச்சம் இருக்கா? கழட்டிப் பாத்துரலாமா?" என்று குறும்புச்சிரிப்புடன் பொதுக் கூட்டம் கமெண்ட் அடித்தது.

பையன் அவர்களைப் பார்த்தான்.

"ஸார், இனிமே உங்களைப் பத்தி பெர்சனலாச் சொல்லணும். இவங்களையெல்லாம் போகச் சொல்லுங்க!" என்றான்.

வயிற்றில் பாலை வார்த்து விட்டான். நான் எப்படிச் சொல்வது என்று யோசித்துக் கொண்டிருந்ததை அவனே சொல்லிவிட்டான்.

"எல்லாரும் போங்கப்பா... அட போப்பா... மவுண்ட்பேட்டன் ராவ் அதான் கவர்னர் ஜெனரலே சொல்லிட்டாருல்ல?"

ஹெச்.என்.ஹரிஹரன்

பையன் எழுந்து தனியே கிடந்த இன்னொரு சேரில் போய் உட்கார்ந்தான். நான் அவன் பெயரிலிருக்கும் புதுமையை எண்ணி வியந்து கொண்டே பின்தொடர்ந்தேன்.

'அது என்ன மவுண்ட்பேட்டன் ராவ்...? இந்தப் பையனோட அப்பா மவுண்ட் பேட்டனா? சீச்சீ... மவுண்ட் பேட்டனிடம் வேலை பார்த்தாரா? இல்லாவிட்டால் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தது மவுண்ட் பேட்டன்னு தப்பாப் புரிஞ்சுக்கிட்டு, பையனுக்குப் பேர் வெச்சிட்டாரா? அப்படியும் இருக்காது... மவுண்ட் பேட்டையில் வசிக்கும் பையனாக இருப்பான்... அதனால் மவுண்ட் பேட் ராவ், மவுண்ட் பேட்டன் ராவாகிவிட்டிருப்பான்.'

என்ன எழவோ..பையன் பக்கத்தில்போய் அமர்ந்தேன். பையன் ஒரு டயரியை எடுத்து அதன் பக்கங்களை சர்ரென்று விசிறினான். அதிலிருந்து விரிந்த நாற்றத்தில், அது குறைந்தது பத்து வருடங்களுக்கு முற்பட்டதாக இருக்கும் என்று தீர்மானித்தேன். அதன் நடுவில் சங்கராச்சாரியாரின் படம்.

''கண்ணுல ஒத்திக்க ஸார்.''

செய்தேன்.

''ஒரு அஞ்சு ரூபா வை சார்.''

வைத்தேன் — விவரமான பையன்! முதலிலேயே பணத்தைப் பிடுங்கிக் கொண்டான்.

''கைய நீட்டு ஸார்.''

நீட்டினேன். என்னிடமிருந்து பேனாவை வாங்கிக் கொண்டு, ஏதோ ஆவேசம் வந்தவன் போல் கைகளில் கிறினான். நீலம் வடிந்தது.

''யோகமான கை சார் உங்களுக்கு, இன்னும் மூணு மாசத்துல உங்களுக்கு இடமாற்றம் இருக்கு ஸார்!''

''இடமாற்றமா?''

''அட என்னா ஸார்! புரமோஷன் டெஸ்டுல்லாம் உண்டுல்ல உங்களுக்கு? அதுல கெலிச்சு...''

உண்மையிலேயே அன்றைக்குத்தான் அதற்குரிய விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து கொடுத்திருந்தேன்.

''அப்படியா...!'' முகத்தில் என்னையுமறியாமல் பூரிப்புப் படர்வதை உணர்ந்தேன். பின்னே, ஆயிரம் ரூபாய் ஊதிய உயர்வு என்றால் சும்மாவா?''

''இன்னும் கேளு ஸார்.''

''சொல்லுப்பா.''

''உங்களுக்கு பேரும் புகழும் கூடிவரப் போகுது. ஊர்வலமா ஒங்களை மாலை போட்டு ரோட்டுல அழைச்சிட்டுப் போகப் போறாங்க.''

'எனக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருந்தது; அதைத்தான் இப்படி மறைமுகமாகச் சொல்கிறானோ?

நாங்கள் இருவரும் இப்படித் தொடர்ந்து பேசுவது போல் உங்களுக்குத் தோன்றும். ஆனால் சுற்றி நின்று வம்பு பண்ணுகிறவர்களை அவ்வப்போது துரத்தியும் ஒட்டுக் கேட்பவர்களது காதில் விழாதபடி தாழ்வான குரலிலும் பேசிக் கொண்டிருந்தோம்.

''எழுபத்தாறு வரைக்கும் ஆயுசு கெட்டி ஸார்.''

''அட, ஏம்பா அவ்வளவு?''

''உசிரு போம்போது பொட்டுனு போயிடும் ஸார்... இழுத்துப் பறிச்சிக்கினு இருக்காது...''

''ஏதோ பரவாயில்லை அந்த மட்டுக்கும்.''

''ஆனா ஒரு விஷயம் ஸார்!''

''அதென்னப்பா, ஆனா?''

''இன்னும் பதினொரு நாள்ள ஏதோ கெடுதி சம்பவிக்கப் போகுது. உங்க சட்டை... புதுச்சட்டை டர்னு கிழிஞ்சு போகலாம். பஸ்ல இறங்கறபோது கால் பிசகலாம்.''

வருங்கால மனைவியைப் பார்க்க விடாமல் ஏதாவது ஆகிவிடப் போகிறதே என்று

## அருள்வாக்கு

நமது வேதம், சாஸ்திரம், கலாசாரம் என்றால் அவற்றின் பக்கமே வர பயப்படும் இன்றைய ஹீன ஸ்திதியில், இவற்றுக்கும் பசங்களை இழுக்கும்படியாக அவர்கள் படிக்க ஆரம்பிப்பதிலிருந்தே அவர்களுக்குக் கணிசமான ஸ்டைபெண்ட்கள் தர வேண்டும். படிப்பு முடிந்து போகிற போதும், ஆயுள் பூராவும் ஒரு கஞ்சி காய்ச்சிக் குடிப்பதற்காவது தேவைப்பட்ட ஒரு தொகையை அவன் பேரில் ''ஃபிக்ஸட் டெபாஸிட்'' டில் போட்டு விட வேண்டும். மூலத்தை அவன் கையாண்டு ஆழும் பாழும் செய்ய இடம் தராமல், வட்டி மாத்திரமே அவனுக்குக் கிடைத்து வரும்படி செய்ய வேண்டும்.



வித்யைக்காகவே வித்யை என்று குருமார்கள் கற்றுக் கொடுப்பதும், சிஷ்யர்கள் கற்றுக்கொள்ளுவதும்தான் உத்தமம். வித்தத்துக்காகவும் (பணத்துக்காகவும்) வித்யை என்பது மத்யமம். வித்தத்துக்காகவே வித்யை என்றால் அது அதமம். வித்யையே இல்லாமல் வித்தம் மட்டும் குறிக்கோள் என்று தற்போது அதமாதமமாக உலகம் முழுவதும் ஓர் 'அவுட்லுக்' உண்டாகியிருக்கிறது. இந்நிலையில் நாம் ரொம்பவும் ஐடியலிஸம் வைத்துக் கொண்டால் ப்ரயோஜனப் படாது. அதனால்தான் ஓரளவு கணிசமான த்ரவிய ஸஹாயம் குருசிஷ்யர்களுக்குச் செய்தே வித்யையை வளரச் செய்ய வேண்டுமென்கிறேன்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

## பரிசு ரூ 300/-

## வாசகர் பட்டி மன்றம் -8



### ரசிகர் மன்றங்கள்:
### தேவையே!
### தொல்லையே!

நீங்கள் என்ன கருதுகிறீர்கள்? அனுபவ பூர்வமான எண்ணங்களைக் கல்கியில் அரைப்பக்கத்துக்குள் அடக்குங்கள்! இரு தரப்பிலும் இரு கட்டுரைகளுக்குப் பரிசு ரூ. 100 × 2.

தவிர இரு கட்சிகளிலிருந்தும் முக்கியமான ஐந்து ஐந்து கருத்துக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாகும். அவற்றுக்கு ஆறுதல் பரிசு ரூ 10 × 10.

எந்தக் கட்சிக்கு அதிக ஆதரவு? மதிப்பெண் உணர்த்தும்.

**முடிவு தேதி: அக்டோபர், 6.**

வழக்கமான வேண்டுகோள், நிபந்தனை:

உறையின் மேல் ''பட்டிமன்றம்—8'' என்று குறிப்பிடுவதுடன், கீழே விலாசம் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்திரித்துக் கட்டுரையுடன் இணைத்து அனுப்பவும்.

பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

பயமாயிருந்தது.

''கடைசிலஒருபேப்பரோடவாங்கலார்... என்ன பரிகாரம் பண்ணலாம்னு குறிச்சுத் தர்றேன்.''

'சரி' என்றபடி மௌனமாய் மேற்கொண்டு காத்திருந்தேன்.

''அவ்வளவுதான் ஸார். இவ்வளவு நேரம் சொன்னதெல்லாம் யார்கிட்டயும் சொல்லிடாதீங்க!'' என்றான்.

'அஞ்சு ரூபாய்க்கு அம்புட்டுத்தானா?' என்று நினைத்துக் கொண்டே எழுந்து வந்தேன்.

அதுவரை காத்துக் கொண்டிருந்த பசங்கள் திடும்மென்று சூழ்ந்து கொண்டான்கள்.

''என்னடா சொன்னான், அந்தப் பொடிப் பய?''

ஜோஸ்யன் சொன்னது நினைவுக்கு வந்தது.

''அதெல்லாம் சொல்ல மாட்டேன்'' என்று மறுத்தேன்.

''ஏய், ஏதோ மறைக்கிறான். என்ன விஷயம்? சும்மா சொல்லு!'' தாடையைப் பிடித்துக் கொண்டான்கள்.

இதற்கிடையில் ஜோஸ்யனிடம் கன்சல்ட் செய்ய மூன்று பேர் காத்திருந்தார்கள்.

''ஆமா... இவனுக்கு புள்ளயே பொறக்காதுன்னு சொல்லியிருப்பான். அதான் சொல்ல வெக்கப்படறான்'' என்று ஒரு கமெண்ட் வந்தது.

எல்லோரும் சிரிக்க, நானும் அவர்களது சிரிப்பில் கலந்து கொண்டேன்.

ஆனால் இயல்பாகவே எனக்கு ஓட்டை வாய். அதிலும் ஜோஸ்யன் சொன்ன விஷயங்கள் மறைக்குமளவிற்கு அந்தஸ்து பெற்றவை அல்ல என்று தோன்றிற்று. விளைவு...? ஜோஸ்யனின் தடைகளை மீறி எல்லாவற்றையும் கொட்டிவிட்டேன்.

பொதுக் கூட்டத்திற்குச் சுவாரசியம் கலைந்து போயிற்று—இதுதான் எல்லாருக்கும் தெரியுமே என்கிற முணுமுணுப்போடு. அதே சமயம் அடுத்தபடியாக ஜோஸ்யம் கேட்கப் போயிருந்தவனுக்குக் காத்துக் கொண்டிருந்தது.

கிட்டத்தட்ட பதினைந்து நிமிடங்களில் அவர்களை முடித்து அனுப்பி விட்டு என் முன்னால் வந்தான். முதலில் போணி பண்ணினவன் என்கிற அந்தஸ்து அளித்து எனக்கு 'போய் வரேன் ஸார்!' என்று கும்பிடு போட்டுவிட்டு வெளியில் இறங்கிப் போனான்.

அவன் போன பின்னர்தான் நான் கொடுத்த பேனா திரும்பி வரவில்லை என்றும் கடைசியில் குறித்துத் தருவதாக இருந்ததை மறந்து போனதையும் நினைத்தேன்.

பேச்சு மறுபடி ஜோஸ்யத்தில் இறங்கியது. எனக்கப்புறம் ஜோஸ்யம் கேட்டு வந்தவர்களது வாய்கள் கிண்டப்பட்டன.

எல்லோரும் என்னை மாதிரியே, ''அதெல்லாம் சொல்ல மாட்டேன்'' என்றார்கள்.

''அட சொல்லப்பா!''

''சொல்ல மாட்டேன்... சொல்லக் கூடாதுன்னு சொல்லியிருக்கிறான்.'' என்றார்கள்.

''ஆமா... இவனும் முதல்ல இப்படித்தான் சொன்னான். அப்புறம் எல்லாத்தையும் தானாகவே கொட்டிட்டான்.''

''சும்மா டூப் விடாதீங்கப்பா'' என்றார்கள் மூவரும்.

''வேணும்னா கேட்டுக்குங்கப்பா'' என்றபடி நானே மறந்து போய்க் கொண்டிருந்த என் ஜோஸ்ய பலன்களை வரிசையாய் மாறி மாறி ஒலிபரப்பினார்கள்.

முடிய வேண்டியதுதான் தாமதம், ''ஐய்யய்யோ ஏமாத்திட்டான்'' என்ற ஒலி ஏக காலத்தில் மூவரிடத்திலிருந்தும் எழுந்தது.

''என்னாச்சு?'' என்று பயந்து போன குரலில் விசாரித்தேன்.

''அந்தப் பொடிப் பய உங்கிட்ட சொன்னதைத்தான் எங்ககிட்டயும் சொல்லியிருக்கான்.''

''ஏண்டா நீங்க உங்க கையை நீட்டினீங்களா... இல்ல இவன் கையை காட்டினீங்களா?'' என்று கமெண்ட் வந்தது.

''டேய், உன் கை நீளங்களுங்கடா'' என்று என்னைப் பார்த்து இன்னொருத்தன் கமெண்ட் அடிக்கச் சிரிப்பு அலை ஓய வெகு நேரமாயிற்று.

நாங்களும் அசடை மறைத்துக் கொள்ள அந்தச் சிரிப்பு மிகவும் பயன்பட்டது.

சாயங்காலப் பொழுது இன்றைக்கு வித்தியாசமாகக் கழிந்ததில் எல்லோருக்கும் பரம திருப்தி... எங்களுக்கு 'அஞ்சு ரூபா போச்சே என்கிற எரிச்சலும்.

வீட்டுக்கு ஒவ்வொருத்தராய்க் கிளம்ப ஆரம்பித்தோம்.

வாசலில் மறுபடி நிழலாடியது.

தலைப்பாகையும் கையில் ஓலைச்சுவடியும் தோள் பையுமாய் வாசலில் ஒருத்தன் நின்று கொண்டிருந்தான்.

அவனைப் பார்த்துவிட்டு என்னிடம், ''யாருடா இவன் புதுசா இருக்கான்'' என்று நண்பன் கேட்டான்.

நான் வாசலருகில் சென்று அவனிடம், விவரம் விசாரித்தேன்.

''யாருப்பா நீ?''

''ஜோஸ்யம் பாக்கறீங்களா ஸார்?'' என்றபடி உள்ளேறி வந்தான்.

''இப்பத்தான் ஒரு பையன் வந்துட்டுப் போனான்... இதென்ன ஜோஸ்யர்கள் வாரமா?'' என்றேன்.

அந்த ஜோஸ்யனுக்கு நான் சொன்னது புரியவில்லை.

''நல்லா ஜோஸ்யம் பார்ப்பேன் ஸார்'' என்றபடி தோள் பைக்குள் கையை விட்டு கவர்களிலிட்ட கடிதங்களை எடுத்தான்,

ஏதோ தோன்றியது.

''உம் பேரென்ன கார்ன்வாலிஸ் ராவா?'' என்றேன்.

''இல்ல ஸார்'' என்றான்.

''பின்னே?''

''மவுண்ட் பேட்டன் ராவ்.''



* ஊர்ச்சாக்கடை திருக்குளத்தில் இணைக்கப்பட்ட காட்சி.



* வெளிப் பிராகாரமா? ப



* கழிப்பிடமாகிவிட்ட நந்தவனம்

# வேதனை
# வெண்ணெ



* மாட்டுத் தொழுவமாகிவிட்ட நூறு கால் மண்டபம்.



* கணேசன்

சுந்தரரும் சடங்கவி சிவாச்சாரியார் மக
இருக்கிறார்கள். முகூர்த்த நேரம் நெருங்கிவிட்ட
அந்தச் சமயம் பார்த்து, "நிறுத்து!" என்று
"ஏன் பெரியவரே! இப்படி அபசகுனமாய்ச்
கேட்கிறார்கள்.

"அபசகுனமா? நான் செய்துவிட்டேனு? ஹ
எனது அடிமை! இவன் தாத்தா எழுதிக் கொ
அனைவருமே எனக்கு அடிமைகள்தான் என்று எ
அப்படியிருக்க, என் அடிமையான இவன் எப்
கொள்ள முடியும்? அதனால்தான் நிறுத்தச் சொ

"பார்ப்பதற்குப் பித்தனைப் போல் இருக்கிறு
கொடுத்தாரா? இதென்ன புதுக் கதை? அந்தக்
எப்படிச் சொல்கிறாய்?" — திருமணம் நின்று பெ

"சந்தேகமிருந்தால், ஊர்ப் பெரியவர்கள் ஒ
டுமே!" என்கிறார் முதியவர்.

ஊர் பெரியவர்கள் அனைவரும் ஊர்க் கோயி
ஆராய்ந்து, 'அந்தக் கையெழுத்து உண்மையான
கள். வேறு வழியின்றித் திருமணமும் நின்று பெ

"எல்லாம் சரி! ஆனாலும் தாங்கள் யார் என்
வென்றும் தெரியவில்லையே!" என்று ஊர் பெரி

அதற்கு அந்த முதியவர், "என்னைத் தெரியவி
விடு!" என்று கோயிலைச் சுட்டிக்காட்டி மறைந்த



...றக்கும் இடமா?

# ...யூட்டும்
# ...ய்நல்லூர்

...னைப் பூங்கோதையும் மணவறையில் உட்கார்ந்
... இதோ.... சுந்தரர் தாலி கட்டப் போகிறார்....
...ழித்தபடி வருகிறார் ஒரு முதியவர்.
...சொல்கிறீர்கள்?'' — அனைவரும் பதற்றத்துடன்

...ஹஹஹா....! இந்தச் சுந்தரன் யார் தெரியுமா?!
...ந்த ஓலையைப் பாருங்கள். தனது சந்ததியினர்
...க் கையெழுத்துப்போட்டிருக்கிறார் பாருங்கள்...
... என் அனுமதியில்லாமல் திருமணம் செய்து
...னேன்!''
...உனக்கு நான் அடிமையா? என் தாத்தா எழுதிக்
...கையெழுத்து என் தாத்தாவுடையதுதான் என்று
...ன கோபத்தில் கொதித்தெழுகிறார் சுந்தரர்.
...கூடி, கையெழுத்தைச் சரிபார்த்து நீதி வழங்கட்

...ுள்ள நூறு கால் மண்டபத்தில் ஒன்றுகூடித் தீர
...கையெழுத்துத்தான்!' என்று தீர்ப்பு வழங்குகிறார்
...கிறது.
...ாங்களுக்குப் புரியவில்லையே. தங்கள் ஊர் எது
...வர்கள் கேட்கிறார்கள்.
...லை? இந்த ஊர்தான் என் ஊர். இதுதான் என்
...போகிறார்.

'ஓ! வந்திருந்தது இறைவனே!' என்று அனைவரும் மெய்சிலிர்க்க, இறைவனோ, ''ஏன் பேசாமலிருக்கிறாய்? என்னைப் பாடு சுந்தரா! பாடு!'' என்று அசிரீரியாய் ஒலிக்கிறார்.

''தங்களை என்ன சொல்லிப் பாடுவதென்றுதான் தெரியாமல் தவிக்கிறேன்!'' என்கிறார் சுந்தரர்.

''என்னைப்' பார்த்தவுடன் நீ சொன்ன முதல் வார்த்தை, 'பித்தனைப் போல் இருக்கிறாய்...' என்பதுதானே. அதனால் 'பித்தா' என்றே தொடங்கிப் பாடு!'' என்று இறைவனே அடியெடுத்துக் கொடுக்க,

''பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா...'' என்று பாடுகிறார் சுந்தரர்.

— இதெல்லாம் திருவெண்ணெய்நல்லூர் கிருபாபுரீஸ்வரர் கோயில் பற்றிப் பெரியபுராணத்தில் அறியக்கிடக்கும்செய்திகள். படிக்கப் படிக்கப் பார்க்கத் தூண்டும் விவரங்களல்லவா!

போய்ப் பார்த்தோம்; நொந்து போனோம்! ஆம்; அன்று சிவபெருமானுக்கும் சுந்தரருக்கும்நடந்தவழக்குவிசாரிக்கப்பட்ட இடமான நூறு கால் மண்டபம் இன்று எப்படி இருக்கிறது, தெரியுமா? மாட்டுத் தொழுவமாக — மாட்டு மூத்திரமும் சாணமும் கலந்த சகதியாக...

கோயிலின் வெளிப்பிராகாரம் எப்படி? அங்குதான் ஊரிலுள்ள அத்தனை பால் காரர்களும் தங்கள் மாடுகளையும் எருமைகளையும் கொண்டு வந்து பால் கறக்கிறார்கள்.

சுவாமிகிருபாபுரீஸ்வரர் நந்தவனம் ஆண்களுக்கான கழிப்பிடமாகவும் அம்பிகைமங்களாம்பிகையின் நந்தவனம் பெண்களுக்கான கழிப்பிடமாகவும் மாறிவிட்ட கொடுமை!

கோயில் திருக்குளத்தைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை; கொஞ்சம்கூட வெட்கப்படாமல் ஊர்ச் சாக்கடைக் கால்வாயைக் கொண்டு வந்து இணைத்திருக்கிறார்கள்!

''இப்போது திருப்பணி வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன!'' என்றார் திருப்பணிக் குழுச் செயலாளர் கணேசன். உண்மைதான்! இப்போது நடந்து கொண்டிருக்கும் திருப்பணியால்பழுதுபட்ட இடங்கள்செப்பனிடப்படும்; வெள்ளையடிக்கப்படும்; பெயிண்ட் அடிக்கப்படும் என்பதெல்லாம் வாஸ்தவம்தான்! ஆனாலும் கோயில்களின் அன்றாடச் சுத்தத்திற்கு யார் பொறுப்பு? கோயில் நிர்வாகம் மட்டும்தானா பொறுப்பு? கும்பிடப் போகும் ஒவ்வொரு பக்தரின் பொறுப்புமல்லவா அது!

சுவாமிக்கு அபிஷேகம் செய்வதும் அர்ச்சனை செய்வதும்தான் பக்தி என்ற எண்ணம் மாறி, கோயிலைச் சுத்தமாக வைத்திருப்பதும், சுத்தப்படுத்துவதும் பக்திதான் என்ற எண்ணம் வரவேண்டும். கோயிலுக்குச் செல்லும் ஒவ்வொருவரும் ஓர் அரை மணி நேரமாவது கோயிலைச் சுத்தப்படுத்தி விட்டு வர வேண்டும். இந்தக் 'கர்சேவா' எண்ணம் வராதவரை பக்தி என்பதெல்லாம் வெறும் வெளி வேஷமாகத்தான் இருக்க முடியும்!

— இளங்கோவன்

எதிர்பார்ப்புக்கு
அப்பாற்பட்ட அரியதொரு படைப்பு!



**மோதி காண்டினெண்டல்**
**R80 நைலான் கார் டயர்**

## மை லே ஜ் ப்ளஸ்!

**ஆம்**, உண்மையைச் சொல்லப்போனால், இது ஒரு ஒப்பற்ற, அரிய படைப்பு !

**ஆராய்ச்சியே இதன் முதலீடு**

பல கோடி ரூபாய் செலவிலான மோதி காண்டினென்டல் ஆராய்ச்சியே, நிகரற்ற தொழில் நுட்பச் சிறப்புடைய இந்த R80 நைலான் கார் டயரைப் படைத்துள்ளது.

**மேலும் பல சிறப்புகள்.**

உயரிய R80 ப்ரீமியம் டயர், கூடுதல் அகலம் கொண்டதால், அதிக உறுதியான பிடிமானத்தைத் தருகிறது.

சாலையில் நீங்கள் செல்லும் போது, இதுவரை அறிந்திராத அந்த ஒரு பிடிமானத்தை R80 அளிப்பதற்கு இன்னும் இரு காரணங்கள் : விஞ்ஞான ரீதியில் வடிவமைக்கப்பட்ட, 15% அதிக நான்-ஸ்கிட் டெப்த் (சருக்காமல், வழுக்காமல் இருக்க 15% அதிக ஆழமுடையது) அடங்கிய ட்ரட் பரப்பு, நெளிந்து, வளைந்து அமைக்கப்பட்ட ஏழு ரிப்புகள்.

**எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டது.**

ஆம், இது எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்ட ஒரு படைப்பு இதனால் நீங்கள் ஒரு போதும் நினைத்துப் பார்த்திராத மேம்பட்ட மைலேஜ் இப்பொழுது கிடைத்திடும் வாய்ப்புள்ளது. உயரிய தொழில்திறன் அளித்திடும் இந்த வாய்ப்பினை நழுவ விட்டு விடாதீர்கள். R80 க்கு மாறுங்கள்- இனி நீங்கள் வேறெந்த டயருக்கும் மாறமாட்டீர்கள்.





**மோதி காண்டினென்டல்**



ஒரு போதும் அயராத டயர்

# மாண்புமிகு முதலமைச்சர்

சருக்கம் 24

## காதல் போராட்டம்!

"வா, தேவி!"

திருத்தமான புன்முறுவலுடன் உள்ளே நுழைந்த தியாகவல்லி, மஞ்சத்தின் விளிம்பில் அமர்ந்து மணாளனின் அலை மோதும் சருக்கத்தை முகத்தில் படிக்கிறாள்.

"ஜோதியின் கலக்கம் இன்னும் தீரவில்லையா, பிரபோ?"

அநபாயன் அர்த்தங்கள் நிறைந்த பார்வையுடன் நோக்குகிறான்.

"கலக்கம் என்றால்?"

"காதல் கலக்கம்!"

"தேவி!"

பதறிப் போனான் ஞான கம்பீரனான அநபாயன்.

"நான் காதல் கலக்கம் என்று குறிப்பிட்டது, நீங்கள் ஜோதியைக் காதலிக்கிறீர்களா? அல்லது சேக்கிழாரை ஜோதி காதலிக்கிறாளா? இல்லை உண்மையிலேயே மனத்துள் மறைவாய்ச் சேக்கிழார் ஜோதியை விரும்புகிறாரா என்பது புரியாமல்தான்! பேச்சுக்கள் பலவாறு அடிபட்டாலும் சேக்கிழாரைக் குறைகூறி எவரும் பேசவில்லை. வைணவர்கள் மட்டும் சேக்கிழாரையும் ஜோதியையும் முடிச்சுப் போட்டுப் பார்த்தாலும் அதை என்னால் ஏற்க முடியவில்லை. ஆனால் இதில் ஏதோ ஒரு மறைமுகமான நாடகம் இருக்கிறது.

"தேவி! நாடகம் இருக்கிறது என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இது ஒரு நல்ல நாடகம்; நாயன்மார்கள் நாடகம்."

"நாயன்மார்கள் பெயரைச் சொல்லி நீங்கள் நாடகமாடாமல் இருந்தால் போதும்! காரணம் நீங்கள் ஜோதியை எண்ணியே பாதியாய் இளைத்து வருவதைத் தங்கை முக்கோக்கிழானடி தேவி சொன்னாள்!"

"அவள் சொல்லித்தான் உனக்குத் தெரிந்ததா?"

"நான்தான் உங்களைப்பரிபூரணமாக நம்பி விட்டேனே?"

"அப்போது அவள் நம்பவில்லை என்கிறாய்?"

"பின்? அவளது இரவுகளைத்தான் நீங்கள் இந்த நாடகத்துக்குப் பயன்படுத்தி வருகிறீர்களே! அவள்தானே சந்தேகிப்பாள்?"

தேன் சொட்ட வேண்டிய நேரத்தில் இப்படித் தேள் கொட்டத் தொடங்கி விட்டதே என்று வேதனைப்பட்டான் குலோத்துங்க சோழ மாமன்னன்.

பட்டத்தரசி மேலும் அங்கு அமர்ந்து கணவனை மேலும் குழப்பாமல் எழுந்து நடந்தாள். அப்போது...

அதே காற்சிலம்பொலி இப்போதும் கணீரிட்டது. ஆனால் ஒலிப் பேதம்... முன்னர் தென்றல்; இப்போது புயல்! மேலும் மேலும் கலங்கிப் போன சோழ மாமன்னன் மஞ்சத்தில் புரண்டு புரண்டு படுத்தான். முக்கோக்கிழானடி தேவி சந்தேகித்தது போல இரவிலேயே தூக்கமில்லை என்றால் பகலிலா தூக்கம் வரப் போகிறது?

ஜோதி அழகின் ஜோதியாய் மட்டுமே இருந்திருந்தால் அது வேறு செய்தி. அவள் கலையின் ஜோதியாய், காவியத்து ஜோதியாய், சிலைகள் பேசும் சிற்பங்களின் ஜோதியாய் விளங்குகிறாளே! பலர் நெஞ்சை அலைக்கழித்தது பாதி உண்மை: பகிரங்கமாகச் சொன்னால் குலோத்துங்க சோழ மாமன்னனுடைய நெஞ்சைக் கொள்ளை கொண்டு விட்டது முழு உண்மையாயிற்றே!

அன்று மாலை ஜோதியை அரண்மனைக்கு வரச் சொல்லி ஆளையனுப்பி வைக்கத்தான் எண்ணினான். இங்கே தியாகவல்லி மூட்டிய சந்தேக நெருப்பு சரியாகவே சுட்டுவிட, எண்ணத்தை மாற்றிக் கொண்டான். அவள் தங்கி இருக்கும் மாளிகை நோக்கிச் சென்று விரிவாகவே பேசி விடுவது என்றும் முடிவு செய்து கொண்டான்.

ஆனால் அதே நேரத்தில்..... உள்மனம் மட்டும் "அநபாயா! திருத்தொண்டர் புராணம் உதயமாக வேண்டும். அது ஒரு திங்களில் உருவாகலாம்; ஓராண்டில் உருவாகலாம்; பல்லாண்டானாலும் ஆகலாம். ஆனால் பாதியில் நின்றுவிடக் கூடாது. பார்த்து நடந்து கொள்!" என்று எச்சரிக்கவும் தவறவில்லை.

வானில் இரவுக்கும் மாலைக்கும் இரகசிய ஒப்பந்தம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. எப்போதுமே பகலில் நடப்பது இரவுக்குத்தேவையற்றது;இரவில்நடப்பவை பகலுக்குஒத்துவராதது-இதுஒருதத்துவார்த்தமான இரகசிய உடன்பாடு!

அரண்மனை வாயிலில் ரதம் ஆயத்தமாக இருந்தது.

தன்னை ஒரு மாறவேள்போல் அலங்காரம் செய்து கொண்ட சோழர் குல திலகம் குலோத்துங்கன், ரதத்தில் அமர்ந்து புறப்படுகிறான். அரண்மனை முதல் மாடத்திலிருந்து தியாகவல்லியும் கவனிக்கிறாள். ஏதோ ஓர் இரகசிய ஒப்பந்தம் ரதமேறிச் செல்வதாக நினைத்துக் கொள்கிறாள். கண்களில் நீர்

கோவி. மணிசேகரன்

முத்துக்கள்.

ஜோதியின் தனி மாளிகையின் வாயிலில் ரதம் வந்து நிற்கிறது.

வல்லரசி ஓடோடிச் சென்று செய்தியறிவிக்கிறாள்...

சூன்யத்துள் சூன்யமாய் ஒரு சூட்சுமச் சிரிப்புடன், சுந்தர கோலமாய்த் தன்னையலங்கரித்துக் கொள்ளும் சோபையிலிருந்து விடுபட்டு, சுகானந்தத்தையே வெறுத்துவிட்டவள்போல வெம்பிய முகமும், வீங்கிய கண்களும் நம்பிய நெஞ்சு நலிவுற்ற நோக்குமாகக் காணப்பட்டாள் ஜோதி.



மாடத்தில் காலடி ஓசை.

மான்மதச் சாந்து முன்கூட்டியே வந்து, மூக்குள் நுழைந்து,வருவது அநபாயன் என்பதைக் கட்டியங் கூறுகிறது.

அறையினுள் பிரவேசிக்கிறான் அநபாயச் சோழன்.

சாளரத்து வழியாக எங்கோ பார்வையைச் செலுத்திக் கொண்டே "வரவேண்டும் சக்கரவர்த்திப் பெருமானே!" என்றாள் ஜோதி.

அவளது போக்கு குலோத்துங்கனுக்கு அதிர்ச்சியைத் தருகிறது.

"எங்கோ நோக்கியவாறுதானா என்னை வரவேற்க வேண்டும் ஜோதி?"

"எங்கோ நோக்கிக்கொண்டில்லை.குன்றத்தூர் திசையை நோக்கிக் கொண்டிருக்கிறேன் கோமகனாரே!"

குன்றத்தூரை! சேக்கிழாரை நோக்கிக் கொண்டிருக்கிறேன் என்பதை எவ்வளவு தெளிவாகச் சொல்லுகிறாள்!

"ஜோதி!"

மன்னன் குரலில் மயக்கம் தள்ளாட அழைக்கக் கேட்டு, இன்னலறியா மின்னலும் கன்னலுமான எழிலரசி ஜோதி திரும்புகிறாள்; பின்னர் அருகில் நெருங்குகிறாள்.

ஜோதியா இவள்?

ஒப்பனை ஒளி எங்கே? கண்களில் ஓராயிரம் கனவுகள் எங்கே?

பனிமலர்ப் பார்வை எங்கே? இருகனி மரத் தோற்றமெங்கே? நனிசிறந்த நடை எங்கே? கம்பீர இடை எங்கே? மடை திறந்த அழகுவெள்ளம்தான் எங்கே? எங்கே?

ஒருநாள் போதில், இப்படியா ஒடிந்து போவாள்?

"உட்கார் ஜோதி! நேற்று ஏன் குன்றத்தூரிலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு விட்டாய்?"

"இது ஓர் எச்சிலைக்கதை!"

"எச்சிலைக்கதையா?"

புரண்டு வந்த வேதனையால் எதைச் சொல்லுகிறோம் என்பது புரியாமல் சொல்லி விட்டதற்காகத் தன்னுள் விதிர்த்துப் போனாள். இந்த எச்சில் ரகசியம் இரு நாவுகளுக்கு மட்டுமே தெரிந்த ஒரு நாவின் ருசி!

ஜோதி சுதாரித்துக் கொண்டு சொன்னாள்: "உண்டு முடித்ததும் இலையைக் கழுவியா இருப்பிடத்தில் வைக்கிறோம்? தூக்கி வீதியிலல்லவா எறிகிறோம்? அந்தக் கதை என் கதை என்று சொல்ல வந்தேன்!"

நன்றாகவே சுதாரித்து விட்டாள்.

"ஜோதி! நீ ஒரு திசை நோக்கி நெஞ்சு குமுறுகிறாய்! நான் ஒரு திசை நோக்கி நெஞ்சினைஅலைமோதச் செய்கிறேன்! உண்மை; நான் ஒப்புக் கொள்கிறேன். இது ஒரு சேக்கிழார் நாடகம். நீ திருத்தொண்டர் கதை தவிர வேறு திருநடம் புரியாத திருமடந்தை என்பதனையறிந்து மதுரைக்குத் தூது அனுப்பினேன்; சேதி தெரிவித்தேன்! திருத்தொண்டர்புராண உதயத்துக்காக நீயும் ஒப்புக் கொண்டு தேனூரிலிருந்து இந்தக் கங்காபுரிக்கு வந்தாய்! எனக்கு உடந்தையாக என்னவெல்லாம் ஆடவேண்டுமோ அனைத்தும் ஆடினாய்! நீ முற்றாட்டாய் எனது சாம்ராஜ்யத்துள் அடங்கிய எந்த ஊரை அல்லது நகரைக் கேட்டாலும் சர்வ மான்யமாய்த் தந்துதவினாலும் போதாது! அப்படி ஒரு சேவை செய்தாய்! செய்தும் வரவேண்டும்! ஏனென்றால் நான் கனவு காணும் எனது காலத்துப் பெரியபுராணம் இன்னும் தொடங்கப் பெறவே இல்லை! அது வருகிற திருவாதிரையில் வாய்திறக்க இருக்கிறது! இதற்குள் உனக்கேற்பட்டு விட்ட மனத்திருப்பம் என்ன? உன்னையே நீ எச்சிலையாகப் பாவித்துக்கொண்டதன் மர்மம்புரியவில்லை! சொல்!"

"இதோ இந்த அலங்காரம் வெறுத்திருக்கிறேனே... புரியவில்லையா மன்னர் பிரானே!"

"புரியாமல்தான் கேட்கிறேன்!"

"எந்தத் தமிழை, என் ஆட்டத்தால் கனியவைத்துத் தொண்டர்சீர் பரவ முனைந்தேனோ, அந்தத் தமிழுக்கு நான் ஆளானால் பரவாயில்லை; தமிழைக் காதலித்துத் தமிழோடு மாண்டு போவேன். எனது முந்தைய முடிவும் அவ்வாறானதாகத்தான் இருந்தது. இப்போது தமிழ்போல் அழகாய், தமிழ் போல நேர்மையாய், தமிழ் போல் இனிமையாய் இருக்கும் சேக்கிழாரின் ஜோதி, இந்த ஜோதியைப் பாதிக்கத் தொடங்கிவிட்டது! இந்த ஜோதி அந்த ஜோதியுடன் கலக்கத் துடிக்கிறது! ஆனால் அந்த ஜோதி? அது அருட்பெருஞ் ஜோதி! என் செய்வேன்? இப்போது சொல்லுங்கள் மன்னர் பெருமானே! என் செய்வேன்?"

மன்னன் குலோத்துங்கன் மருண்டு போனான்.

அவன் வந்தது?

இந்த ஜோதியில் கலந்து இன்ப ஜோதியின் வெளிச்சத்தில் மன்மதக் காப்பியம் படிக்க!

ஆனால் ஜோதி படிக்க நினைத்தது?

சேக்கிழார் காப்பியமாயிற்றே!

குலோத்துங்க சோழ மாமன்னனுக்கு இது ஒருபுதியசெய்தியில்லையானாலும்இன்று பூரணமாக முகவரி தெரிந்துவிட்ட செய்தியல்லவா?

மாளிகையின் நிலா முற்றத்துப் பக்கமாகப் போய் நிற்கிறான்.

வளர்பிறை நிலவு வையத்தை வாழ்த்திக் கொண்டிருந்தது.

ஜோதியும் கண்களை முந்தானையால் துடைத்த வண்ணம் பின்தொடர்ந்து நடந்து சென்றாள். தவறி நெருப்பில் விரல் காட்டிய குழந்தையின் விசும்பலைப் போல விசும்பினாள். ஆனால்குலோத்துங்கனுடைய குழப்பத்துக்கும் குமுறலுக்கும் என்ன உவமை கூறுவது?

காதல் என்பது எல்லோருக்குமே முன்னிலவு காலமாய் விட்டால், பிறகு உலகத்து ஒரு பாகம் எதிர்பார்ப்புக்கும் ஏக்கத்துக்கும்

# ட்ரஸ்ட்

## பற்களை பராமரிக்கிறது பல வழிகளில்



டிராஸ்ட் பற்பசையில் சேர்ந்துள்ள உட்பொருள் சுவாசத்தை தூயதாக்கி உங்கள் பற்களில் ஒளிச்சுடர் கூட்டுகிறது.

டிராஸ்ட் பற்பொடியில் இணைந்துள்ள புளோரைடு பற்களின் எனுமலை உறுதிப்படுத்தி உங்கள் பற்களை வல்லமையாக்குகிறது. டிராஸ்டின் நிறைந்த நுரைவளம் பற்களில் ஒளிச்சுடர் கூட்டுகிறது.

டிராஸ்டின் நீண்ட பரப்புள்ள ஊத் பிரஷ்கள் அதிக சிரமமின்றி பற்களை சுத்தம் செய்கிறது. வெல்வெட் முனை குச்சங்கள் ஈறுகளை மென்மையாக தேய்த்து கொடுத்து உங்கள் பற்கள் சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் விளங்க உறுதி செய்கிறது.







## ட்ரஸ்ட்

முழுமையான பல் பராமரிப்புக்கு

# சுவாதி ஃபைனான்சியர்ஸ்

கவர்ச்சிகரமான வட்டி விகிதம்! **27%**




வழக்கமான வட்டி விகிதங்களின் மேல் **3%** கூடுதல் வட்டி அளிக்கப்படுகிறது

(குறைந்தபட்சம் ரூ 1000/-ம் அதன் மடங்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்)

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற கூடுதல் போனஸ் 1% | 22% + 3% + 1% = 26%

வருடத்திற்கு ஒரு முறை வட்டி பெற கூடுதல் போனஸ் 2% | 22% + 3% + 2% = 27%

காமதேனு டெபாசிட் திட்டம்: இத்திட்டத்தின் மூலம் உங்களது முதலீடு 48 மாதங்களில் இரு மடங்காகிறது. அதாவது ரூ 5000/- ரூ 10000/- ஆகிறது.

பேங்க் கியாரண்டி பிக்சட் டெபாசிட்களும் ஏற்றுக்கொள்ளப்படும்.

| சிறப்பு அன்பளிப்புகள் | | |
|---|---|---|
| முதலீடு | வருடம் | சிறப்புப் பரிசு |
| ரூ 20000/- | 5 | 1 சவரன் தங்க மோதிரம் |
| ரூ 10000/- | 5 | ½ சவரன் தங்க மோதிரம் |
| ரூ 10000/- | 2 | ¼ சவரன் தங்க மோதிரம் |
| ரூ 5000/- | 2 | 1 அழகிய வெள்ளி குத்துவிளக்கு |

குறிப்பு:
வாடிக்கையாளர்கள் மற்றும் பொது மக்கள் வேண்டுகோளுக்கிணங்கி கூடுதல் வட்டியும், சிறப்பு பரிசுகளும், *31.10.86* தேதிவரை நீடிக்கப்பட்டுள்ளது. இந்த பொன்னான வாய்ப்பை பயன் படுத்தி கொள்ளும்படி கேட்டு கொள்கிறோம்.

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி,




**சுவாதி** ஃபைனான்சியர்ஸ்

பதிவு அலுவலகம்: 75, ரங்கநாதன் தெரு (முதல் மாடி)
உஸ்மான் ரோடு, எம்.எஸ். காம்ப்ளக்ஸ், தி. நகர்,
சென்னை-600 017. PP 443827

சுவாதி — உங்களது வெற்றிக்கு துணைவன்

இடமில்லாமல் சரிந்து விடுமல்லவா?

''ஜோதி இப்படி அமர்! நாம் இது குறித்துத் தெளிவாக ஒரு முடிவுக்கு வர வேண்டும். எனது ஜீவனில் விரிந்து கிடப்பன நான் உன்னிடம் கொடுத்து, உன் மூலம் சேக்கிழாருக்கு அளித்த வெற்று ஓலைச் சுவடிகள்! அவற்றில் ஒரே ஓர் ஓலைக்கு மட்டுமே வேலை கிடைத்திருக்கிறது! இன்னும் எத்தனையோ ஆயிரம் ஓலைகள் உயிர் பெற்று எழ வேண்டும்! அதற்காக நாம் ஆடிய நாடகம் துன்பியலாய் முடியாமல் இன்பியலாய் மலர வேண்டும்; உலகெலாம் மணக்க வேண்டும்!''

உலகெலாம்...

அன்று இந்தச் சொல்லுக்கு எப்படியெல்லாம் அபிநயம் பிடித்தோம்...!

'ஜோதி' என்ற சொல்லுக்கு 'அலகில் ஜோதியாய் மட்டுமல்லாது உலகின் ஜோதியாய்ப் பிரகாசித்தோம் அல்லவா?

இருவரும் அருகருகே இருந்த ஆசனங்களில் அமர்ந்தனர். நிலவு சாட்சியாக ஒளிர்கிறது.

ஜோதி கண்களை மீண்டும் துடைத்துக் கொள்கிறாள்.

''ஜோதி! சேக்கிழார் உன்னைத் தமது பொன் விளக்கின் தந்தத் தூண்டுகோலாக எண்ணியதாலோ என்னவோ, வாழ்த்துப் பாடலிலேயே ஜோதி என்ற சொல்லை வைத்தார்! அலகில் ஜோதியாய் வைத்தார்! அவர் அப்படித்தான் வைத்தாரோ என்னவோ? இப்படி நான் எண்ணிப் பார்க்கிறேன்!''

''அப்படி வைத்துப் பார்த்ததனால் வந்த ஆபத்துத்தானே பிரபோ, என்னை இப்படியெல்லாம் மேலும் மேலும் அலைக்கழிக்கச் செய்துவிட்டது!''

''அது அன்பின்பாற்பட்டது! தெய்வத்தின் பாற்பட்டது! நீ ஆசையின்பாற்பட்டு அவருக்கு மாசை மகுடமாக்கிவிடாதே! ஆசையின்பால் அறையலுற்று அவமானத்தைத் தேடி வைக்காதே!

''அவர் என்னைக் காதலிக்கவில்லை என்கிறீர்களா?''

''ஒரு போதும் கிடையாது! சேக்கிழாரை நான் நன்றாகவே அறிவேன்!''

''எப்படி அறிவேன் என்கிறீர்கள்?''

''சொல்லத்தான் வேண்டுமென்றால் சொல்லுகிறேன்! ஜோதி! நமது பவானி இருக்கிறாளே... உன்னிலும் ஐந்து வயது கூட என்றாலும் கறுப்பில் ஒரு தெளிவான கார் வண்ண அழகி! அதாவது என்னைப் போல! அவள் சேக்கிழார் மீது உன்னளவுக்கு என்றிராவிட்டாலும் ஓரளவுக்குக் காதல் கொண்டுவிட்டாள். ஒருநாள் சந்தர்ப்பம் வசமாகக்கிடைத்ததை வைத்துத் தனது மனத்தின் வேகத்தை வெளிப்படுத்தினாள். பொதுவாக, சேக்கிழார் பெருமான் கறுப்பு என்பது ஓர் அபூர்வ தத்துவம் என்பதை ஞான பூர்வமாகப் பவானியிடம் விளக்கப் போய், அந்தக் கறுப்பாகிய நான் உங்களை நேசிக்கிறேன் என்று கூறியதோடு மட்டுமல்லாது, துணைவியாகவும் ஆசைப்பட்டு விட்டாள்!



இண்டிவனத்தில் தாகமா?
கொஞ்சம் யோசியுங்கள்!

நீங்கள் திண்டிவனத்திற்குச் செல்லும் போது தாகமெடுத்தால், 'அவசியம் தண்ணீர் குடித்துத்தான் ஆக வேண்டுமா?' என்று ஒருமுறைக்கு இருமுறை யோசிப்பதே நல்லது. திண்டிவனம் நகராட்சி வழங்கும் தண்ணீர் அத்தனை நம்பகமானது அல்ல. உதாரணம்: பெருமாள் கோயில் தெருவும் கடைத்தெருவும் சந்திக்கும் இடத்தில் ஐந்தடி ஆழத்தில் தண்ணீர்க் குழாய் வால்வு ஒன்று இருக்கிறது. எப்படி? சாக்கடை நீரில் மூழ்கிக் கிடக்கிறது. இன்னும் இப்படி எத்தனை இடங்களோ, யார் கண்டது! அதனால் தான் யோசிக்கச் சொல்கிறோம்.

''எவ்வளவு துணிச்சல்? நான் அவர் மீது காதல் கொண்டிருப்பதை அறியாதவளா?''

''யார் அறிவார்? அப்படி அறிய முற்பட்ட சிலருக்குத்தான், நானும் நீயுமாகச் சேர்ந்தே வேறுவிதமாகக் கூறி வருகிறோமே! சிலருக்குக் குலோத்துங்கன் காதலி என்பது... பலருக்குக் கபாலீச்சுரன் காதலி என்பது... சேக்கிழாரே இன்னும் உன்னைக் கபாலீச்சுரன் காதலி என்றுதானே எண்ணி வருகிறார்; எண்ணும்படியாகச் செய்து கொண்டோம்! அப்படிச் செய்து கொள்ளவில்லையென்றால், சேக்கிழார் உன்னை இவ்வளவு உரிமையோடு நெருங்க விட்டிருக்க மாட்டார்! நீ அவரை எந்தக் கணத்திலும் கட்டு விடுவாய் என்கிற பயம் இருந்து கொண்டே இருந்தது என்பதற்கு அவர் உன்னிடம் உரையாடிய பல விளக்கங்களே போதும்!''

ஜோதி தலையைத் தாழ்த்திக் கொள்கிறாள். மீண்டும் நிலாக் கண்களில் மழைத் துளிகள்.

''பவானியின் செய்தியைச் சொல்லுங்கள்!''

''பவானி செய்தியில் நீ கொஞ்சம் ஆத்திரப்படுகிறாய்! அதுவும் உன்னைப் போன்றே ஓர் இயல்பான மாயை; பலவீனம்!''

இப்போது குலோத்துங்க சோழமாமன்னன் பொங்கிவந்த கண்ணீருக்கு மடைபோட முடியாமல் பொலபொலக்கச் செய்து விட்டான்.

புரிகிறது ஜோதிக்கு...!
நன்றாகவே புரிகிறது.

(தொடரும்)

போட்டிக் கதை – 2

# நாணயத்தின் இன்னொரு பக்கம்

மலர்வண்ணன்

"ஏய் மிஸ்டர், இந்த வேலையெல்லாம் நம்மகிட்டே வேண்டாம். என்ன நினைச்சிட்டு இருக்கீங்க மனசிலே? எதிலேயும் ஒரு நேர்மைவேணும்.இப்படியெல்லாம்பேசிட்டு நின்னீங்க. அப்புறம் நான் பொல்லாதவன் ஆயிடுவேன். மரியாதையா வெளியே போங்க. பெரிசா வந்திட்டாங்க வீடு தேடி."

ராமச்சந்திரன் வெகு ஆவேசமாகக் கத்தினான். கண்கள் இறுக மூடியிருந்தன. நிகோட்டின் கறைபடிந்த கறுப்பு உதடுகள் படபடக்க, மூக்குச் சிவந்திருந்தான்.

எதிரில் அவன் வீடு தேடி வந்த புதிய மனிதன், கோபி நின்று கொண்டிருந்தான்.

வெள்ளை வெளேரென்ற சட்டை. உள்ளே சிவந்த உடல். கழுத்தில் மெல்லிய சங்கிலி ஒன்று ஊஞ்சலாடிக் கொண்டிருந்தது. தலையை இதற்கு மேல் சாய்க்க முடியாது.

முதல் பார்வையிலேயே கோபி, பெரிய பணக்காரன் என்பதனை எல்லோருமே யூகித்துவிட முடியும். அவன் வந்த காரும் டைய பணக்காரத் தன்மையைப் ற்றிக் கொண்டிருந்தது.

ராமச்சந்திரனின் மனைவி இவர்கள் இரண்டு பேரையும் வெகு ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.. இந்த அதிசயத்தை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இது எப்படிச் சாத்தியம் என்பது மாதிரி பார்த்துக் கொண்டிருந்தாள்.

ராமச்சந்திரன் வாசலில், பூவரச மரத்தின் அடியில் போடப்பட்டிருந்த சேரில் உட்கார்ந்திருந்தான். பெய்ன்ட் கழன்று போன, துருப்பிடிக்க ஆரம்பித்திருந்த சேர்.

கால்மேல் கால் போட்டு, ஒரு செல்வ தேசத்து ராஜ குமாரனைப் போல உட்கார்ந்திருந்தான் ராமச்சந்திரன்.

முகத்தில்கோபம்கொப்புளித்துக்கொண்டிருந்தது. எதிரில் நின்று கொண்டிருந்த கோபியைப் பார்க்காமல், பார்க்க விரும்பாமல் வேறு எங்கோ பார்த்துக் கொண்டு இருந்தான்.

கோபி முகத்தில் சோகம் அப்பிக் கிடக்க, கைகளை அடக்கத்தோடு கட்டிக் கொண்டு அமைதியாக நின்றான்.

ராமச்சந்திரனின் மனைவி தனது கணவனையும், கோபியையும் மாறி மாறிப் பார்த்து எடை போட்டுக் கொண்டிருந்தாள்.

ராமச்சந்திரன் கோபியின் கால் தூசுக்குக் கூட ஈடாக மாட்டான். எதில்? பண விஷயத்தில். மற்றபடி அவனுக்கு என்று சில ப்ளஸ் பாய்ண்டுகள் இருக்கலாம்.

கோபியின் கார் என்ன விலையோ, அதில் பாதி இருந்தால் போதும், ராமச்சந்திரனின் வீட்டைக் கட்டிவிடலாம்.

கொஞ்சம் பலமாக மழை பெய்தால் போதும்,வீடு ஒழுகுகிறது. உள்ளே வெறும் ஓட்டை உடைசல்கள். பண்டம், பாத்திரங்கள் கூடக் கொஞ்சமாகத்தான் இருக்கின்றன.

மனைவி பெருமூச்சுவிட்டாள். அவள் நின்



நிருந்த இடத்திலிருந்து பூவரச மரம் வெகு தூரத்தில் இருந்ததால், அவர்கள் பேசிக் கொண்டிருந்தது காதில் சுத்தமாக விழ வில்லே.

ஓரளவு படித்த, ஓரளவே வசதியுள்ள தனது கணவனுக்கு முன்னல் கொழுத்த பணக்காரன் ஒருத்தன் கைகட்டி வாய் பொத்தி நிற்கிற விஷயத்தை அவளால் நம்பவே முடியவில்லே.

கோபி எவ்வளவு நேரம்தான் அப்படியே நிற்பான்?

எப்படியும் காரியத்தைச் சாதித்தே தீர வேண்டும் என்ற, இக்கட்டான நிலேயில் இருந்தான் அவன்.

வீட்டில் இருந்து புறப்படும்போதுகூட, சவால் விட்டுக் கொண்டுதான் வந்திருந்தான்.

அப்போதே அப்பா சொன்னர். "கோபி! வாய்ச் சவடால் என்றைக்குமே பயன்படாது. காரியத்தில் கண்ணுக இரு. வார்த்தைகளேக் கொட்டுறவன் என்றைக்குமே ஜெயித்தது இல்லே!"

"நான் விதிவிலக்கா இருக்க விரும்பறேன், அப்பா!"

"ரைட், அப்படியானல் காரியத்தைச் செய்திட்டு அப்புறமா வாயால் விளாசு. முதலில் வேண்டாம்."

"ஏன், இதை என்னுலே செய்து முடிக்க முடியாதா?"

"எதிரியின் பலத்தைக்குறைச்சு மதிப்பிடறவன் என்றைக்குமே வெற்றி மேடை ஏற முடியாது."

"எதிரி அவ்வளவு பலசாலியா?"



"அப்படி நினேச்சுச் செயல்படு. காரியம் ஈசியா முடியும்."

"இல்லாததை நினேச்சுப் பயப்படுவது, பைத்தியக்காரத்தனம்!"

"ஓ.கே. செய்து காட்டு."

"இதோ ஒரே மணி நேரத்தில்!"

"ரைட், போயிட்டு வெற்றியோடு வா! பெரிய காரை எடுத்திட்டு, பளிச்சின்னு போ. ஒரு அப்பியரன்ஸ் இடைக்கும்."

கோபி நகர்ந்தான்.

"வெள்ளேச் சட்டை போட்டுட்டு டீசன்டா போ."

அப்பாவின் இத்தனே எச்சரிக்கையும் இவ்வளவு சரியாகப் பலிக்கும் என்று கோபி கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லே.

"சார்" என்முன் கோபி.

குரல் பிசிறடித்தது. மெல்லிய நடுக்கமும், கொஞ்சமாய் நப்பாசையும் அதில் கலந்திருந்தன.

"உங்களே நான் போகச் சொல்லியாச்சு. ஏன் சார் இப்படித் தொந்தரவு செய்யறீங்க. உங்களே மேக்ஸிமம் எவ்வளவு திட்டணுமோ அவ்வளவு திட்டியாச்சு. இன்னுமா ரோஷம் வரலே! என்னே விலே கொடுத்து வாங்க முடியாது."

கோபி தாழ்ந்த குரலில் பணிவாகப் பேசினன்.

"சார், ரொம்ப இக்கட்டான சூழ்நிலே. இந்த ஆர்டர் கிடைத்தால்தான் நாங்க முன்னுக்கு வரமுடியும். இல்லேன்னு போண்டி ஆகி நடுத் தெருவுக்கு வரவேண்டியதுதான். பார்த்து உதவி செய்யுங்க சார், நீங்க மனசு வச்சா, நாங்க வாழ முடியும்."

"................"

"உங்களே எப்பவுமே மறக்க மாட்டோம், சார்."

"................"

"இதற்கு முன்னடி இருந்தவர் நிறைய உதவி செய்தார் சார். இப்போ மூனு லட்சத்தில் அவருக்கு ஒரு பங்களாவை பிரசன்ட் பண்ணியிருக்கோம்."

"................"

"ப்ளீஸ் சார்."

ராமச்சந்திரன் சட்டென்று எழுந்தான்.

"இங்கே பாருங்க மிஸ்டர். ஆசை காட்டி என்னே மயக்க முடியாது. சாதாரணக் குடிசை மாதிரி ஒழுகற வீட்டில்தான் நான் வாழறேன். காசு பணம் போதலேயேன்னு காலமெல்லாம் அழற வாழ்க்கைதான் நான் வாழறேன். ஏன் தெரியுமா? நான் யோக்கியனு வாழ ஆசைப்படறேன். என்னுேட நல்ல பேரை இழந்து பங்களாவில் வாழ ஆசைப்படலே. பொறுமையாச் சொல்றேன். கேளுங்க. தயவு செய்து, நான் உங்க கழுத்தைப் பிடிச்சுத் தள்ளறதுக்குள்ளே நீங்களாப் போய்டுங்க."

ராமச்சந்திரன் வார்த்தைகளேக் கொட்டிவிட்டு, வேகமாக நடந்து வீட்டுக்குள் நுழைந்து கொண்டான்.

கோபி யோசித்தான். கதவைத் திறந்து காருக்குள் நுழைந்து கதவை அறைந்து சாத்தி



பாகவதர்: என்னப்பா... வாசல்லே கூட்டம்!

ஒருவர்: உங்களைப் பாராட்ட வந்திருக்காங்க....

பாகவதர்: என்னைப் பாராட்டவா? நான்தான் ஒரு வருஷமா கச்சேரியே செய்யலேயே?

ஒருவர்: அதுக்காகத்தான்...!

— எஸ். சஞ்சீவ்

னுன். கார் கிளம்பியது.

**கோ**பி சரியாக அரை மணி நேரத்திற்குப் பின் கதிர்வேலின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

''வாடா!'' என்ருன் கதிர்வேல். ''என்ன விஷயம்?''

''உன்னோட உதவி வேணும்.''

''சொல்லு.''

''எட்டு லட்ச ரூபாய்க்கு ஒரு ஆர்டர் வருது.''

''வெரி குட்!''

''ஆனுல் சம்பந்தப்பட்ட கிளார்க் அமௌன்ட்டைச் சொல்ல மாட்டேன் என்கிருன். ஆள் புதுசு. மடக்க முடியலே.''

''எந்தக் கம்பெனி?''

''எஸ்.ஆர்.கே.''

''ஓ.... அவன் பெயர்?''

''ராமச்சந்திரன்.''

''ராமச்சந்திரஞ?'' கதிர்வேல் வேகமாக நடந்தான்.

''ஆமாம்.''

''ஒல்லியா, கருப்பா, கபில்தேவ் கண்ணாடி போட இருப்பானே....''

''கரெக்ட். அவனேதான்!''

''காரியம் ஆயிடும்.''

''எப்படி?''

''அவன் குடுமி என் கையில் இருக்கு!''

''அது தெரிஞ்சுதான் வந்திருக்கேன். ஆனுல் விஷயம் கிளியராத் தெரியாது.''

''தெரியவே வேண்டாம். அது சரி, எட்டு லட்சம் என்ன சரக்கு?''

''துணி, வெறும் காடா. உனக்கு ஞாபகம் இருக்கா? பவர் லூம் போட்டப்போ, நூல் விலை குறைஞ்சு ரிஜக்ட் ஆன சரக்கு. அப்படியே குடோன்லே இருக்கு. தள்ளி விடலாம்னு பார்க்கறேன்.''

''சரி..பத்தாயிரம் இருக்கா?''

''இருக்கு.''

''புறப்படு.''

இரண்டு பேரும் புறப்பட்டார்கள். அடுத்த அரை மணி நேரம் காரியங்கள் சொல்லி வைத்தாற் போல நடந்தன.

கதிர்வேல் என்ன மாயமோ செய்து, ராமச்சந்திரனை சம்மதிக்க வைத்தான். பத்தாயிரம் ரூபாய் பணம் கைமாறிவிட்டது.

''சரி சார். நீங்க டெண்டர் பாரத்தை அமௌண்ட் தவிர மத்ததையெல்லாம் பில் அப் பண்ணி ரெடியா வையுங்க. அமௌண்டை சாயந்திரம் பில் அப் பண்ணிக் கொடுத்திடலாம்.''

''தேங்க்யூ வெரிமச். காரியம் சக்ஸஸ் ஆனுல் இன்னும் பத்தாயிரம் வாங்கித் தருகிறேன், சரியா?'' என்ருன் கதிர்வேல்.

ராமச்சந்திரனும் சோகமாகத் தலையாட்டினுன். அந்தச் சோகத்துக்குள் ஒரு சந்தோஷம் ஒளிந்து கொண்டுதான் இருந்தது.

ஆறு நாட்களுக்குப் பிறகு —

அன்று தேதி பதினைந்து.

நேரம் மாலை ஐந்து பதினைந்து.

இடம் ராமச்சந்திரனின் வீட்டு எதிர்புறம். பூவரச மரத்தின் அடியில்.

பெயின்ட் சுழன்று போன, துருப்பிடிக்க ஆரம்பித்திருந்த அதே சேர்.

கால் மேல் கால் போட்டு, ஒரு செல்வ தேசத்து ராஜகுமாரனைப் போல உட்கார்ந்திருந்தான் பணக்கார கோபி.

ராமச்சந்திரன் முகத்தில் சோகம் அப்பிக் கிடக்கக் கைகளை அடக்கத்தோடு கட்டிக் கொண்டு அமைதியாக நின்ருன்.

கோபியின் முகத்தில் கோபம் வெடித்துக் கொண்டிருந்தது.

கொப்பளித்தான், ''ஏய் மிஸ்டர், இந்த வேலையெல்லாம் நம்மகிட்ட வேண்டாம். என்ன நினைச்சிட்டு இருக்கே, மனசிலே. எதிலேயும் ஒரு நேர்மை வேணும். இப்படியெல்லாம் பேசிட்டு நின்னே, அப்புறம் நான் பொல்லாதவன் ஆயிடுவேன். மரியாதையா ரேட்டைச் சொல்லிடு. பெரிசா வாங்கிட்டான் காசை மட்டும்.''

ராமச்சந்திரன் கைகளை இன்னும் இறுகக் கட்டிக் கொண்டு பணிவோடு பேசினுன். ''பார்க்க முடியலே சார். கவலையை விடுங்க. பாரத்தை என்கிட்டக் கொடுங்க. நானே பில் அப் பண்ணி போட்டுடறேன்.''

''வெறும் வார்த்தையாலே என்னை ஏமாற்ற முடியாது. காசைக் கொடுத்துக் காரியத்தைச் சாதிக்கிற வேலையைத்தான் நான் செய்கிறேன். கொடுத்த காசுக்கு வேலை வாங்காமல் விடறதில்லே.''

''முடிச்சிடறேன் சார்.''

ராமச்சந்திரன் கைகட்டி வாய் பொத்தி, தலைகுனிந்து நிற்க, கோபி கால்களை மாற்றி வலது காலை இடது கால் மேல் போட்டுக் கொண்டு கம்பீரமாக நிமிர்ந்து கொண்டான். சேர் கிறீச்சிட்டது.

வீட்டு வாசலில் இருந்தபடியே, ராமச்சந்திரனின் மனைவி இந்தக் காட்சியை அதிசயமாகப் பார்த்துக் கொண்டே நின்ருள்.

புரியாமல் பெருமூச்சு விட்டாள்.

# க்ளினிக் ஸ்பெஷல் ஷாம்பூ பொடுகினை எதிர்த்து அகற்றுகிறது. எனவே நீங்கள் அனைவரையும் கவர முடிகிறது.

பொடுகின் காரணமாக எவரையும் கவர முடியாமற் போனால். ஒரு ஸ்பெஷலிஸ்ட் ஷாம்பூவைப் பயன் படுத்தும் வேளை வந்துவிட்டது என்று பொருள். க்ளினிக் ஸ்பெஷல் ஷாம்பூ. இதன் மென்மை நுரை கேசத்தைக் கழுவுகிறது! அடங்கியுள்ள சிறப்புப் பொருள் பொடுகினைக் கட்டுப்படுத்துகிறது. உங்கள் கேசம் அழகு பெறுகிறது. சுத்தமாகவும், ஆரோக்கிய மாகவும், அரிப்பற்றும் திகழ்கிறது.




# க்ளினிக் ஸ்பெஷல்

## ஷாம்பூ.

**பொடுகற்ற, சுத்தமான, ஆரோக்கியமிக்க கேசத்திற்கு.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமிக்க தயாரிப்பு.

# சிதம்பரம்

அவார்டு வாங்கிய சிதம்பரம் படத்தைப் பார்த்து விட்டீர்களா என்று யாரும் கேட்டுவிடுவதற்கு முன் இதோ விமர்சனம்:

ஆங்காங்கே தென்படுகின்றன சின்னச் சின்னக் கவிதைகள். டைரக்டர் மில்லி மீட்டர் மில்லி மீட்டராகச் செதுக்கிச் செதுக்கி எடுத்திருக்கிறார் காட்சிகளை.

ஆங்காங்கே தென்படும் சின்னச் சின்ன நெருடல்களும் உண்டு. உதாரணமாகத் தோட்டம் முழுக்கப் பூவைப் பார்த்துவிட்டு வந்த கதாநாயகி, உணர்ச்சிப் பிழம்பாகப் பேசும் இடத்தில் முகபாவங்கள் வெகு இயற்கை. வசன உச்சரிப்புகளோ படு செயற்கை. (தமிழ் வசனங்கள்) டைரக்டர் யாராவது ஒரு விஷயம் தெரிந்த தமிழ்நாட்டுக்காரரைக் கூட வைத்திருக்க வேண்டாமோ?



படம் முழுக்கக் கவிதை பாடி இருப்பது காமிரா. அபாரமான காமிரா. வெகு அழகான பனிப்புகை. பச்சையாய் விரிந்த புல்வெளி. மலைகளின் பசுமையான ஏற்றங்கள் இறக்கங்கள். இந்தக் காமிரா மேனின் துணை இல்லாவிட்டால் படம் நிமிர்ந்திருக்காது.

அப்புறம் சிவகாமி பாத்திரம் ஏற்ற ஸ்மிதா பாடீல். நீள மூக்கில் ஓர் ஒற்றைக் கல் மூக்குத்தி, காதில் ஏழு கல் தோடு, கழுத்தில் மஞ்சளுடன் கூடிய தாலி, நெற்றியில் வட்டமான குங்குமப் பொட்டு. உடம்புக்கு ஒவ்வாத கொஞ்சம் தொள தொள ரவிக்கை (அடர்த்திப் பச்சை, அடர்த்தி மஞ்சள், அடர்த்தி நீலம்) அப்படியே தமிழ்நாட்டுப் பெண் தான். முகத்தில் ஒன்றுமறியா பாவத்துடன் அவர் வளைய வளைய வருவதும், கண்களால் பேசுவதும் — பிய்த்து உதறி விட்டார். வடக்கத்திக்காரர் இந்த அளவிற்குத் தமிழ்நாட்டு நேட்டிவிடியைக் காட்டியிருப்பது அபாரம்.

கோபியும் மிக இயற்கையாகச் செயல்பட்டிருக்கிறார்.

அங்கங்கே லேசான நகைச்சுவை இழை. ஒட்டிக் கொண்டு ஓடினாலுங்கூட மலையாளப் படங்களுக்கு உரித்தான மெதுவாக நகரும் தன்மை சில இடங்களில் 'ப்ச்' என்று சொல்ல வைக்கிறது.

பொழுது நிறைய உடைய, பணம் படைத்த இன்டலெக்சுவல்கள் பார்க்க வேண்டிய ஒரு குடிசைப் பெண்ணின் படம்.

# ஆப்பிரிக்காவில் அப்பு

யானைகளின் வாழ்க்கை முறைகளை அறிவதற்காக ஆப்பிரிக்கக் காடுகளில் தங்கி, கூட்டம் கூட்டமாக யானைகள் போவதையும் வருவதையும் ஜன்ம ஜன்மமாகக் காத்திருந்து ஏதோ ஒரு ஜப்பானிய சினிமாக் கம்பெனி டாக்குமெண்டரி படம் எடுக்க, அதை நம் ஊர் ஆசாமிகள் திரையில் ஓட்டிப் பார்த்து விட்டு, ஒரு தனினி மச்சர், ஒரு அனாதைப் பையன் என்று முன்னும் பின்னும் கோத்து, தமிழ் வர்ணம் பூசினால் எப்படி இருக்கும்? அப்படி இருக்கிறது ஆப்பிரிக்காவில் அப்பு!

படம் பார்த்துக் கதை சொல் பாணியில் படம் நெடுகப் பின்னணிக் குரல். அந்த




நீக்ரோ நடப்பதற்கும், நிற்பதற்கும், பார்ப்பதற்கும் தரப்படும் விளக்கங்கள் சூப்பர்ச் சிரிப்பை அளிக்கின்றன.

தாய் யானை, குட்டிக்கு எப்படிப் பால் கொடுக்கிறது என்பதில் தொடங்கி, எப்படிக் குட்டிக்குச் சரிவில் ஏறக் கற்றுக் கொடுக்கிறது என்றெல்லாம் விலாவாரியாகக் காட்டுகிறார்கள். யானைகள் தண்ணீர் குடிப்பது, மண் வாரிப் போடுவது, நடப்பது, ஓடுவது, இன்னும் ஏதாவது பாக்கியா என்ன?

அந்தக் காட்டெருமையைச் சிங்கம் துரத்தி வந்து அடித்துத் தீனியாக்கிக் கொள்ளும் காட்சி காணக் கிடைக்காதது. அரிது. மற்றபடி —

பாடம் படிக்கத் தொடங்கினால் நமக்கெல்லாம் தூக்கம் வரும் சகஜம்தான்! இங்கே படம் பார்க்கத் தொடங்கியவுடனே அந்தச் சங்கதி என்றால்?

# ஊமை விழிகள்

இத்தனை கொலைகளுக்கு, ப்பூ, இதுவா காரணம்! ஸைகோபாத் கேஸ் என்றால், இவ்வளவு அபாரமான திட்டங்கள் போட்டுத் தீர்மானமாய் ஒவ்வொரு முறையும் செய்வது சாத்தியமா? மாட்டிக் கொள்ளும் பெண்களெல்லாம் அடர்த்தியான மரம் செடி கொடிகளினூடே புகுந்து தப்பிக்காமல், குதிரை வண்டி துரத்த சௌகர்யமாய் அகலப் பாதைகளிலா ஓடுவார்கள்? வண்டிக்காரன், பேத்தி என்று கடைசியில் அறிமுகம் செய்யும் அந்த காரெக்டர்கள் பற்றி எந்தத் தெளிவும் இல்லையே, ஏன்? — இந்த ரீதியில் கேள்விகளை அடுக்கித் திரைக்கதையைச் சீண்டிப் பார்க்கலாம்.

பாத்திரங்கள் என்று பார்த்தால் 'நட்சத்திரக் கலை விழா' ரீதியில் ஏகப்பட்ட பிரபல முகங்கள் — ஐந்து, பத்து நிமிஷங்களுக்கு வந்து போகிறார்கள். இதில் ஸ்ரீவித்யாவும் சரிதாவும் மகா நறுவிசு.

உயிருக்குயிராய் நேசித்த மனைவி, ரத்த வெள்ளத்தில்! தன் நியாயமான போலீஸ் கடமையுணர்வுக்கு எதிரிகள் கொடுத்த இந்த அபாக்கியப் பரிசு எழுப்பும் ஆவேசம். அவளைக் காப்பாற்ற முடியாமல் போன ஆதங்கம். அந்த எதிர்பாராத அதிர்ச்சி. அவள் எழுதி வைத்த வரிகள் விசிறி விட்ட உணர்ச்சிக் கொந்தளிப்புகள் — அடேங்கப்பா, ஆரம்ப நரை வயது டி. ஐ. ஜி.'யாக வரும் விஜயகாந்த் இந்தக் காட்சியில் ஜமாயோ ஜமாய்த்துவிட்டார்!

மறக்காமல் பாராட்ட வேண்டிய இன்னொருத்தர் — சந்திரசேகர். ஆஸ்பத்திரியில் தண்ணீருக்குள் தள்ளப்பட்டுத் தத்தளித்து வெளிவந்ததிலிருந்து, சத்திக் குத்தோடு சாட்சியை இன்ஸ்பெக்டர் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்க்கும் வரை — மகா பரபரப்பு.

ஜெய்சங்கர், கார்த்திக், ரவிச்சந்திரன், சசிகலா எல்லோருமே திரையில் நிற்கிறார்கள். ஸ்ரீவித்யா, சரிதா தவிர மற்ற அத்தனை நடிகைகளும் கொஞ்ச நேரத்திற்காவது நீச்சல் உடையில் பளீர் என்று உடம்பைக் காட்டுகிற மாதிரி வசதியான கதை — டிஸ்கோ



சாந்தி குரூப் டான்ஸ் கொஞ்சம் அதிகப்படியாகவே சூடு!

பாடல்கள், இசை அங்கங்கே அநாவசியமாய் மூக்கை நீட்டினாலும், பத்திரிகை ஆபீஸில் ஜெய்சங்கர் பாடும் அந்த வீரம் செறிந்த பாடல் கும்மென்று நெஞ்சை நிமிர்த்தும்.

ஒன்றிரண்டு புள்ளிகளைத் தவறுதலாய் வைத்துவிட்டாலும், காமிராக்காரர் வரைந்துள்ள கோலம் ஏ. ஒன். அந்த இரவு நேரக்காட்சிகளின் ஊர்வலம் சூப்பர்.

பதினெட்டு ரீல்களுக்கும் அடுத்து என்ன, அடுத்து என்ன என்று ஆர்வத்தைக் கிளப்பிவிட்டு, சஸ்பென்ஸை உயிரோடு வைத்திருப்பது அபாரம். மாணவர்களின் பாய்ச்சல் — பதினாறடிப் பாய்ச்சல்!

— ஜெயமன்மதன்




# அடுத்த முறை, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள் குடும்பத்தைக் காத்திடுங்கள்.




**ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.**

WPL/25 35

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்: ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி. விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.







# ஸன்ஃப்ளவர்

ப்ராண்ட் வனஸ்பதி

இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ பேக்குகளில் கிடைக்கிறது.

WIPRO LTD - Closer to the consumer

சற்றே கவனிப்போம். பார்வைக்கு எளிமையாகத் தோன்றும் இந்த கலர் டிவியை சிறப்பாகத் தயாரிப்பது அவ்வளவு சுலபமல்ல. தோற்றத்தைவிட திறனுள்ள இயக்கத்தை நாடுவோருக்காகவே CTS 605 தயாரிக்கப் பட்டுள்ளது.

CTS 605 கலர் டிவியில் நீங்கள் தைரியமாகப் பணத்தைப் போடலாம்; பின்னர் எதற்கும் கவலைப்பட வேண்டாம். ஏனெனில், பிரபலமான மேற்கு ஜெர்மன் உலகப்புகழ் தொழில்நுட்பத்தின் உதவியுடன் ஹை-டெக் ITT உறுப்புகளை உபயோகித்து, இதைக் கச்சிதமாகத் தயாரித்து வருகிறோம்.

சாலிடெரின் உன்னத தரத்தைப் பெறுவதற்குக் குறுக்கு வழிகளே இல்லை. தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் திறமையுடன் பரிசோதிக்கப்பட்டு, கடுமையான தரக் கட்டுப்பாட்டுக்கு உள்ளான பிறகே ஒவ்வொரு CTS 605 செட்டும் வெளிவருகின்றது. இல்லையேல், அது சாலிடெரின் உயர்ந்த தரத்தை எட்ட முடியாது. ஆகையால்தான் லட்சக்கணக்கானோர் CTS 605 கலர் டிவியைப் பெருமையுடன் வாங்குகின்றனர். அவர்களையே கேளுங்களேன்!

இப்போது உங்கள் முடிவு என்ன? பணத்தை ஏன் வீணாக்க வேண்டும்? நம்பகத் தன்மை, திறனுள்ள இயக்கம், விற்பனைக்குப் பிந்திய உடனடி சர்வீஸ், உங்கள் பணவசதிக்கு உட்பட்ட விலை ஆகியவை உங்கள் குறிக்கோளாக இருப்பின், CTS 605 வாங்குங்கள். மிஞ்சிய பணத்தை வங்கியில் போடுங்கள்.

இதற்குப் பிறகும் CTS 605 விலை உயர்ந்த செட்டாக உங்களுக்குத் தோன்றவில்லை என்றால், கடவுள்தான் உங்கள் பணத்தைக் காப்பாற்ற வேண்டும்.

# இந்தக் கலர் டிவியில் 'ஹோஹோ'ன்னு சொல்ல என்ன இருக்கு?




# CTS 605

தோற்றத்தில் எளிமை, ஆற்றலில் அருமை!

# கலர் சாலிடெர்

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி

## அனுராதா ரமணன் 24



# ஒருப்பாகநீ

"நான் அடிச்சுச் சொல்லுவேன், ஜமீன்தார்வாள்! உங்க மூத்த சம்சாரத்தோட நகைங்க அத்தனையும் இருக்கிற எடம் மாதையனுக்குத் தெரியும். அந்தப் பெண்ணைத் தனியா அழைச்சுண்டு போய்ப் பேச்சுக் கொடுத்துண்டிருந்தான். நீங்களும் நானும் யோசனை பண்ணி முடிக்கிறதுக்குள்ளே, அந்தக் கிழவன், எல்லாத்தையும் சுருட்டிண்டு போயிடப் போறான்."

ஸ்டேஷன் மாஸ்டரின் வார்த்தைகளை நம்ப முடியாமல், நம்பாமல் இருக்கவும் முடியாமல், பிரமித்து நின்றுவிட்டார் லோகநாதன்.

மாதையனைப் பற்றி, அவருக்கு நன்றாகத் தெரியும்.

ஒண்டிக்கட்டை. பிள்ளை குட்டி எதுவுமில்லாததால் பணத் தேவையும் இதுவரையில் ஏற்பட்டதே இல்லை. அவன் பொறுப்பில் குடும்பத்தை ஒப்படைத்துவிட்டு லோகநாதன் வெளியூர் சென்றபோதெல்லாம், ஒரு சிறு துரும்புக்குக்கூட பங்கம் வந்ததில்லை. அவனிடம்; அவருக்குப் பிடிக்காத விஷயம் ஒன்று உண்டென்றால், அது மங்களாம்பாளைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் அவனைத் தடுத்து நிறுத்த முடியாததுதான்....

என்ன செய்வது, மங்களாம்பாள், பலரை இப்படிச் சொக்குப் பொடி போட்டுத் தன்வசம் வைத்திருந்தாள்.

லோகநாதன், தனது மனசில் ஓடிய எண்ணத்தை ஸ்டேஷன் மாஸ்டரிடம் சொன்னபோது, அவர் புகையிலைச் சாறு வழியாமல் முகத்தை நிமிர்த்தி வைத்தபடி சிரிக்கிறார்.

"சுவாமீ.... அந்த ஆள் இத்தனை நாளும் உங்க நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்ததுக்குக் காரணம், இந்த மாதிரி பெரிசா ஒரு ஜாக்பாட் அடிக்கிறதுக்காகத்தான்.... ஓடு மீன் ஓட, உறு மீன் வர்ற வரைக்கும் காத்திண்டிருக்குமாம் கொக்கு. இது புரியாதவா எல்லாரும் மக்கு."

லோகநாதன் பற்களைக் கடிக்கிறார்.

"மாதையா!"

அவர் போட்ட அலறலில் அந்தப் பங்களாவே அதிருகிறது. ஸ்டேஷன் மாஸ்டர்தான் அவரை அடக்குகிறார்.

"இப்ப கத்தி என்ன பிரயோஜனம். அவன், உங்க மூத்த சம்சாரத்தை அழைச்சுண்டு, மேஸ்திரியைப் புதைச்ச ஆத்தங்கரைப் பக்கம் போயிருக்கான். அந்தப் பொண்ணோட உடம்புல உங்க ஒய்ஃபோட ஆவி இருக்கிறதுக்குள்ள, உண்மையைத் தெரிஞ்சுக்கணும்னு, ரொம்ப சாமர்த்தியமாத்தான் வேலை செய்யறான் அவன்...."

ஜமீன்தார் வெடிக்கிறார்.

''அவன் எல்லாத்தையும் சுருட்டிண்டு போகட்டும், நீங்களும் நானும் கட்டை விரலே வாயில வச்சுட்டு உட்கார்ந்திருப்போம்... உம்ம கிட்ட மூவாயிரம் ரூபா நேத்திக்குக் கொடுத்தேனே... எதுக்காக...?''

''உங்க சம்சாரத்தோட ஆவி கிட்டே பேச...''

''பேசினீரா?''

''எங்கே... அப்பாயின்ட்மெண்ட்டே கிடைக்க மாட்டேங்கறதே.... நானும் ஒண்ணும் சும்மா இல்லேங்காணும்... நான் நேத்து சாயந்திரம் எதுக்காக ஆத்தங் கரைக்குப்போனேன்னு கேட்கவேஇல்லையே நீங்க...''

லோகநாதன் அவரை விறைத்துப் பார்க்கிறார்.

''நாகலிங்க மரத்துல ஒரு ஜோடி கோட்டான் வசிக்கறதுங்காணும்... ஊமைக் கோட்டான்... ஜோஸியர்கள் — அதைப் பிங்களன்னு சொல்லுவா... சாயந்திர நேரத்துல புது வஸ்திரத்தைக் கட்டிண்டு பிரும்மா, விஷ்ணு, ருத்திரர்களை பூஜை செஞ்சு, அந்த மரத்துக்குச் சந்தனம் குங்குமம் இட்டு, நடு ராத்திரி வரைக்கும் தனியா நின்னு கோட்டானை பூஜை செய்யணும்...' ஓ... பிங்களா... நான் உன்னை எதைப் பத்திக் கேட்கிறேனோ, அதை நீ உன் சேஷ்டையாலே தெரியப் படுத்தணும்' னு — வேண்டணும். இதுக்குத் தனியா சுலோகம் இருக்கு... ஊமைக் கோட்டான் மனசு வச்சா, கையை விட்டுப் போன எந்தப் பொருளும் 'டாண்' ணு திரும்பி வந்துடும்!''

''அதுக்கு நேத்திக்குத்தான் நான் பார்த்திரா... மங்களா போனதுலேர்ந்து இத்தனை வருஷமா நானும் சொல்லிண்டே இருக்கேன்... ஊமைக் கோட்டானுட்டம் வாயை மூடிட்டு ஏன் இருந்தீங்க?''

லோகநாதனின் ஆத்திரம் நியாயமானதுதான். ஸ்டேஷன் மாஸ்டருக்கு, நகையைத் தேடிக் கண்டு பிடிப்பதற்காக மாத்திரம், அவர், எத்தனை ஆயிரங்களைச் செலவழித்திருக்கிறார்.

பூஜையென்றும், உபாசனையென்றும், மை போட்டுப்பார்ப்பதாகவும்எவ்வளவுபிடுங்கியிருக்கிறார் இவர்? இப்போது புதுசாய் ஒரு கோட்டான் கதை!

லோகநாதனின் கோபமெல்லாம் ஒரு பொருட்டே இல்லை ஸ்டேஷன் மாஸ்டருக்கு. இப்போதைக்கு அவர் சிண்டு இவர் கையில் இருக்கிறதே!

''எல்லாத்துக்கும் ஒரு நேரம் காலம் வர வேண்டாமா...? நான் செஞ்ச பூஜையோட



பயன்தான் மங்களாம்பா, மறுபடியும் வந்திருக்கா... நீங்க என்ன செய்யறீங்கோ...''

இப்படிக் கூறி, ஜமீன்தாரின் காதருகில், வாயைக் கொண்டு போய் — புகையிலைச் சாறை, காதுக்குள்ளேயே துப்புவது போல மிக நெருங்கி, ரகசியமாய் எதையோ சொல்லி விட்டு நகருகிறார் அவர்.

''மாதையனை வீட்டை விட்டு எங்கேயும் அனுப்பாதீங்கோ... அந்தப் பொண் கிட்டேயும், நந்து கிட்டேயும், வர்ற வெள்ளிக்கிழமை மங்களாம்பாளோட திதி வர்றதைப் பத்திச் சொல்லி வையுங்கோ. அன்னிக்கு ஊர்க் குழந்தைகளுக்கு எல்லாம் மங்களாம்பாள் நினைவா அன்னதானம் செய்யப் போறதா சொல்லுங்கோ...''

''அது வேறே செலவா?''

''செலவைப் பார்த்தால் முடியுமா? நீங்க செய்யப் போற காரியத்தாலே — உங்க மனைவியோட ஆத்மா குளிரும். தானா வலிய வந்து நகையெல்லாம் எங்கே இருக்குங்கற விஷயத்தைச் சொல்றாளா இல்லையான்னு பாருங்கோ... சொல்லலேன்னா... நான் சொல்ல வைக்கறேன்!''

''இன்னும் ஒரு வாரம் இருக்கேய்யா அவ திதிக்கு?''

''அதனாலத்தான் சொல்றேன். மாதையனையோ — மத்த ஆளுங்களையோ ஆத்தங்கரைப் பக்கம் விடாதீங்கோன்னு... அந்தப் பொண்கிட்ட அன்னதானத்துக்கான ஏற்பாட்டைக் கவனிக்கச் சொல்லுங்கோ...''

''எப்ப மங்களாம்பா, அவ உடம்புல இருக்கிறதாச் சொன்னீரோ — அப்பலேருந்து நான் அவள் கூடப் பேசறதே இல்லே...''

''பயமாக்கும்! ஹி ஹ் ஹீ...

ஸ்டேஷன் மாஸ்டர், தொந்தி குலுங்கச் சிரித்துவிட்டு நகருகிறார்.

நந்து, இன்பாவிடம் தன் தந்தை சொன்ன விஷயத்தை வந்து சொன்னபோது, உண்மையிலேயே திகைத்து நிற்கிறாள் அவள்.

''நிஜம்மாவா சொல்றே?''

''ஆமா இன்பா... சித்த முந்திதான் அப்பா என்னைக் கூப்பிட்டு இந்த விஷயத்தைச் சொன்னார்...''

''என்னன்னு சொன்னார்?''

''வரப் போற வெள்ளிக்கிழமை உங்க பெரியம்மாவோட திதி... எப்பவும் கொண்டாடறதை விடச் சிறப்பாக் கொண்டாடலாம்னு இருக்கேன்... நீயும், அந்தப் பொண்ணுமா எனக்கு ஒத்தாசை செஞ்சீங்கன்னா நல்லாயிருக்கும்னு...''

''என்ன செய்யப் போறாராம்?''

''ஆயிரம் குழந்தைங்களுக்கு அன்னதானம் செய்யப் போறாராம்... மாதையன் கிட்டே இந்தப் பங்களாவைச் சுத்தம் பண்ற பொறுப்பை ஒப்படைச்சிருக்காரு... என் கிட்டே, படையலுக்கும், அன்னதானத்துக்கும் தேவையான சாமான்களை வாங்கிப் போடற பொறுப்பை ஒப்படைச்சிருக்காரு... உன் வேலை, எல்லாத்தையும் மேற்பார்வை பார்த்துக்க வேண்டியது... சாதாரணமா இந்தப் படையல் சமயத்துல மட்டும் பெரியம்மாவோட குடும்பத்தைச் சேர்ந்தவங்க, அப்பாவுக்குத் தெரிஞ்ச பெரிய மனுஷங்க எல்லாரும் வருவாங்க... இந்தத் தடவை — ஊரே திரண்டு வரப் போறது...''

இன்பா புருவங்களைக் கேள்விக் குறியாக்கிக் கொண்டு அவனைப் பார்க்கிறாள்...

''ஏன் நந்தா...''

''உம்?''

''உங்க பெரியம்மா காணாமப் போயிட்டதாத்தானே சொன்னே... காணாமப் போனவங்களுக்குக் கூடத் திதி நடத்தற பழக்கம் உண்டா...?''

''அதுவா... பெரியம்மா காணாமப் போன கொஞ்ச நாட்களிலேயே எங்க அம்மாவோட கனவுல — அவங்க இறந்துட்ட மாதிரி ஒரு சீன் வந்ததாம்... அதனால, எங்க அம்மா, வருஷா வருஷம் அவங்க வீட்டை விட்டுப் புறப்பட்ட நாளையே திதி நாளா வச்சுட்டுப் படையல் போடத் தொடங்கிட்டாங்க...''

''ஓ... உங்க அம்மாவுக்கும் இந்தத் திதியில வேலை உண்டுன்னு சொல்லு...''

''திதி அன்னிக்குத்தான் எங்க அம்மா வேலை செய்யறதையே பார்க்கலாம்... கல்யாணக் கூடத்துல இருக்கிற ஒவ்வொரு தூண் எதிருலேயும் ரெட்டை வாழையிலை போட்டு,





"இவர்கிட்ட லஞ்சம் கொடுத்து எதையும் சாதிச்சுக்க முடியாது."

"அவ்வளவு கண்டிப்பும் நேர்மையுமா?"

"நீ வேறே... லஞ்சத்தைக் கொட்டித்தான் சாதிச்சுக்க முடியும்."

— என். வி. ரமணி

அம்மா, தன் கையாலேயே பரிமாறுவாங்க... பிரார்த்தனை எல்லாம் முடிஞ்சதும் எட்டு சுமங்கலிங்களைக் கூப்பிட்டு அந்த இலையில் உட்கார வச்சுச் சாப்பிடச் சொல்லுவாங்க... அவங்க திருப்தியா சாப்பிட்டா — பெரியம்மாவே திருப்தியா சாப்பிட்ட மாதிரி ஒரு நினைப்பு அம்மாவுக்கு..."

இன்பா 'களுக்' கெனச் சிரிக்கிறாள்...

நந்து கோபத்துடன் அவளைப் பார்க்கிறான்...

"எதுக்குச் சிரிக்கறே?"

"இல்லே... உங்க அம்மா அப்பாவோட பாலிஸி, எனக்குச் சிரிப்பை உண்டு பண்ணறது... பாவம் உங்க பெரியம்மா. இருந்த வரைக்கும் நிம்மதியா ஒரு கவளம் சாப்பிட்டிருக்க மாட்டா... செத்ததும் பாரேன்... எப்பேற்பட்ட மரியாதை கிடைக்கறதுன்னு... சரி, சரி... மூஞ்சியைத் தூக்கி வச்சுக்க வேண்டாம்... உன்னோட அம்மா அப்பாவைப் பத்தி நான் எதுவும் பேச மாட்டேன்!"

இதைச் சொன்னவள் அத்துடன் நிற்கவில்லை. அந்த நிமிஷமே — வெள்ளிக்கிழமை விசேஷத்துக்காக மாதையனை வைத்துக் கொண்டு பங்களாவை அழகு செய்கிறாள்...

லோகநாதன், தன் கண்ணெதிரே ஓடியாடும் இன்பாவையும் மாதையனையும் பார்த்தபடி, கல்யாணக் கூடத்தில் சாய்ந்திருக்கிறார்...

"மாது... வாசல்லே பந்தல் போட்டுடலாமா... குழந்தைங்க ஒரு வேளை சாப்பாட்டுக்காக எத்தனை நேரம் வெயில்லே நிற்கும்ங்கள்...?"

"ஐயாவை ஒரு வார்த்தை... ஆனா, நீங்க சொல்றதுக்கு எதிரா அவர் ஒண்ணும் சொல்ல மாட்டாரு தாயே!"

அவள், லோகநாதனின் பக்கம் பார்ப்பாள்:

"ஏன் மாமா..."

"அதான் உங்க இஷ்டம்னு சொல்லிட்டேனே... என்னை எதுலேயும் இழுக்காதீங்க.."

"அதுவும் சரிதான்... மாது, ஜமீன்தாரிணியோட போட்டோ எதுவுமே வீட்டுல இல்லையா... போட்டோ கூட இல்லாம எப்படிப் படையலைப் படைக்கறீங்க...?"

மாது இதைக் கேட்டதும் விழுந்தடித்துக் கொண்டு லோகநாதனிடம் ஓடி வருகிறான்...

"அம்மா கேட்கறாங்க... சொல்லுங்க.."

"போட்டோ எடுத்ததில்லே... கல்யாணத்துல எடுத்த போட்டோ எல்லாத்தையும் ஏதோ ஆத்திரத்துல தீ வைச்சுக் கொளுத்தியாச்சு. இப்பப் போய் போட்டோவைக் கொண்டான்னா... எங்கே போறது...?"

"அப்ப, வரலட்சுமி அம்மன் படத்தை — உங்க எஜமானி சுவத்துல வரைஞ்சு வச்சிருக்கிற மாதிரி — அவங்க படத்தையும் வரைஞ்சு வச்சுக்க வேண்டியதுதானே... சரி இஷ்டமில்லேங்கறதை ஒரு வார்த்தையிலே சொல்லிட்டுப் போகட்டும்..."

அவள் மிதப்பாகச் சொல்ல, மாதையன் கைகுவித்துச் சொல்கிறான்.

"தாயே... இந்தத் திதியே உங்களுக்காகத்தான். பழசை மறந்து எல்லாத்தையும் ஏத்துக்கணும்... வேணுமானா ஒரு படம் வரையச் சொல்லிடலாம்..."

"யாரை விட்டு வரையச் சொல்லுவே?"

"டவுன்லே ஸைன் போர்டு வரையறவன் ஒருத்தன் இருக்கான்..."

மாதையன் சொல்லி முடிக்கவில்லை. இன்பா, வர்ணங்களையும், தூரிகைகளையும் எடுத்துக் கொண்டு கல்யாணக் கூடத்துக்கே வந்துவிட்டாள்.

"எங்கே வரையலாம்?"

அவள் — மேலோட்டமாய்க் கூடத்தைச் சுற்றி வந்தவள் — அகன்ற தூண்களைப் பார்த்ததும் ஒருகணம் நிற்கிறாள்...

பழையபடி நெஞ்சுக்குள் சொல்லத் தெரியாத துக்கம் பரவுகிறது....

மளமளவென, தூணிலேயே ஸ்கெட்ச் வரையத் தொடங்கியவள் — இரவு முழுக்க விடாமல் வரைய — விடிகாலையில் எழுந்து வந்த லோகநாதன் — தலையில் கல்லைப் போட்டாற் போல அதிர்ந்து நிற்கிறார்...

தூண் ஒன்றில் அலங்கார பூஷிதையாய் மங்களாம்பாளின் ஓவியம் — முழுசும் பூர்த்தியடையாமல்...

"ஐய்யோ! நீங்க இங்கேயா இருக்கீங்க...?"

புவனாவின் குரல் கேட்டு இன்பாவும், லோகநாதனும் நந்துவும் பிரமித்துத் திரும்பிப் பார்க்க —

புவனா, தலையை இரு கைகளாலும் பிடித்தபடி கீழே விழுகிறாள்.

(தொடரும்)

— ஆத்மாஸ்

## கீழ்க்கண்ட புஸ்தகங்கள் எம்மிடம் கிடைக்கும்
(விலை தபால் செலவு உட்பட)

நாகாராக்ஷரம் (Devanagari Script)

கிரந்தாக்ஷரம் (Devanagiri Script)

1. **ஸ்ரீமத் பாகவதம் — விலை ரூ 415/—**

(5 Volumes— 12 ஸ்கந்தங்கள் — வார்த்தைக்கு வார்த்தை தமிழ் அர்த்தத்தோடு)

2. **ஸ்ரீமத் வால்மீகி ராமாயண சுந்தர காண்டம் — விலை ரூ 80/—**
(தமிழ் அர்த்தத்தோடு)

3. **ஸ்ரீ நாராயணீயம் — விலை ரூ 55/—**

4. **மனுசே ச்லோக & ராம மந்த்ராசே ச்லோக — விலை ரூ 9/—**

(மஹாராஷ்ட்ர பாஷையில் ஸமர்த்த ராமதாஸ் இயற்றியது. ஸ்ரீ பீமராவ் கோஸ்வாமி அவர்களின் அருமையான தமிழ் உரையுடன்)

5. **ஸ்ரீராதாகிருஷ்ண பூஜாவிதானம் — விலை ரூ 10/—**

பல புராணங்களிலிருந்து எடுத்து எழுதியது. ராதா கல்யாணம் செய்வோருக்கு அவசியம் தேவையானது.

6. **நளோ தந்தம் — விலை ரூ 9/—**

(நைஷத காவ்யத்தின் சுருக்கம்)

7. **வேதபாட வழிமுறை — விலை ரூ 8/—**

(Syllabus) ரிக், யஜுர், ஸாம — வித்யார்த்திகளுக்கு அவரவர்களின் வேதத்தில் எந்த் அளவு கற்பிக்கலாம் என்ற விளக்கத்துடன் கூடியது

8. **யாஜுஷ மந்த்ரப்ரச்னம் — விலை ரூ 8/—**

(ஏகாக்னி காண்டம்)

N.B.: மேற்படி ஸமிதியினால் பிரசுரிக்கப்பட்டுள்ள அனைத்து கிரந்தங்களின் விற்பனை வருவாய் பூராவும் எமது வேத பாடசாலையின் நிர்வாஹத்திற்கு செலவிடப்படுகிறது. தாங்களும், தங்கள் நண்பர்களும் தேவையான கிரந்தங்களை வாங்கி வேதபாட சாலைக்கு உதவி செய்ய கேட்டுக் கொள்கிறோம். மேற்படி, கிரந்தங்களை இதர பாடசாலை மாணவர்களுக்கும் நண்பர்களுக்கும் வாங்கி பரிசளிக்கலாம்.

V.P.P.யில் அனுப்புவதில்லை. பூராத் தொகையையும் M.O. (or) Draft மூலம் அனுப்பவும். செக் அனுப்ப வேண்டாம்.

தொகை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர்
புண்ய ஸ்மரண ஸமிதி
D 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.**

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III

ராஜ்மோகன் காந்தி



• இரவல் நூல்கள்



• இலக்கிய சர்ச்சை...

③

# நொந்த உள்ளத்துக்கு ஆறுதல்

ஹிரோஷிமா நாகசாகி ஆகிய நகரங்கள் மீது அணுகுண்டு வீசப்பட்டது. ஜப்பான் சரணடைந்தது. இந்தப் புதிய ஆயுதம் பயன்படுத்தப்பட்டதானது ராஜாஜியைப் பெரும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. சில தினங்களுக்குள்ளாகவே தமது எண்ணத்தை ஒரு சொற்பொழிவின் இடையில் வெளியிட்டார் ஸி. ஆர்:

"எவ்வளவோ கஷ்டங்களையும் சோதனைகளையும் எதிர்கொண்ட போது கூட பிரிட்டனோ அல்லது ஜெர்மனியோ எதிராளி மீது விஷவாயுவைப் பயன்படுத்துகிற ஆசைக்குப் பலியாகாமல் தப்பி வந்திருக்கின்றன. ஐரோப்பிய யுத்தம் இதுபோன்ற பயங்கரங்கள் ஏதுமின்றி முடிவுற்றது. ஆனால் ஜப்பானிய யுத்தத்தின் கடைசி கட்டத்தில் பௌதிக விஞ்ஞானிகளின் ஆயுதமான அணுகுண்டு பிரயோகிக்கப்பட்டது. இதனால் யுத்தம் முடிவுற்றது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அது அதிபயங்கர முறையில் முடிவுற்றிருக்கிறது என்பதையும் மறுப்பதற்கில்லை. இதுபற்றி மக்கள் மகிழ்வதற்கில்லை."

இந்தப் பேச்சு, ராஜாஜி 1972 இல் காலமாகும் வரை அணு ஆயுதங்களை எதிர்த்து அவர் நடத்திய நீண்ட போராட்டத்துக்குக் கட்டியம் கூறுவதாக அமைந்தது. 'அணுகுண்டு வீச்சுக்குப் பலியானவர்கள் ஆசியர்கள் என்பதால் அதனைத் தாமதமின்றியும் நியாய — அநியாயம் பற்றிய தார்மீக சிந்தனை இன்றியும் பிரயோகிப்பது அமெரிக்காவுக்கு எளிதாக இருந்தது' என்று சில காலத்துக்கேனும் நம்பி வந்தார் ஸி. ஆர். அவருடைய கருத்து இது என்று அமெரிக்க எழுத்தாளர் லூயி ஃபிஷரிடமிருந்து தெரிந்து கொண்டார், அன்று நியூயார்க் கொலம்பியா பல்கலைக் கழகத்தில் பணியாற்றி வந்த கே. எல். ஸ்ரீமாலி. இதனை உறுதிப்படுத்துமாறு அவர் ஸி. ஆருக்குக் கடிதம் எழுதினார். ஸி. ஆரின் பதில்:

அமெரிக்கர்களிடம் எனக்கு இருந்த



"ஏன்டி மாலா, உங்க வீட்டுக்கு டூ இன் ஒன் வந்திருக்குன்னு சொன்னியே! பார்க்கலாமா?"

"என் நாத்தனாரைத்தான் சொன்னேன். என்னைப் பத்தி உண்மையையும் சொல்லுவா, கற்பனையாகவும் நிறையச் சொல்லுவா."

— என். வி. ரமணி.

நம்பிக்கையும் அன்பும் அவர்கள் ஜப்பானுக்கு எதிராக அணுகுண்டைப் பிரயோகித்த போது அதிர்ச்சிக்குள்ளாகி ஆட்டம் கண்டுவிட்டன. லூயி ஃபிஷரைச் சந்தித்த போது நான் எனது உணர்வுகளைத் தயக்கமின்றி வெளியிட்டேன். அணுகுண்டு பிரயோகிக்கப்படத் தயாரான போது ஜெர்மனி இன்னும் தோல்வி அடையாமல் யுத்தம் இழுத்துப் பறித்துக் கொண்டு இருந்திருந்தால் ஜெர்மானியப் பெண்கள், குழந்தைகளுக்கு எதிராக அது பயன்படுத்தப்பட்டிருக்காது என்று நான் நம்புகிறேன். நான் இந்த விஷயத்தில் தவறான சிந்தனை கொண்டிருப்பதாகக் கடவுள் அருளால் நிரூபணமானால் மகிழ்வேன்."

ஜப்பான் சரணாகதி அடைந்த சிறிது காலத்துக்குள், ஜப்பானிய உதவியுடன் இந்திய தேசிய ராணுவத்தை வழி நடத்திச் சென்று கொண்டிருந்த சுபாஷ் போஸ் ஒரு விமான விபத்தில் மரணமடைந்ததாகச் செய்தி வந்தது. சில ஆண்டுகளாகவே ஸி. ஆரும் அவரும் காங்கிரஸின் இரு துருவங்களாக இருந்து வந்திருந்தனர். போஸ் உடனடியாகச் சுதந்திரம் வேண்டினார். ஸி. ஆர். படிப்படியாகச் சுதந்திரம் கிடைத்தால் போதும் என்று கருதினார். சுபாஷின் சகோதரர் சரத் சந்திரர் இன்னமும் சிறையில் இருந்தார். அவருக்கு சுபாஷைப் பாராட்டியும் தமது துயரத்தைத் தெரியப்படுத்தியும் ஸி. ஆர். எழுதினார்:

"(பாதை வேறுபட்டாலும்) உங்கள் சகோதரரை எப்போதுமே நான் வியந்து போற்றி வந்திருக்கிறேன். சுபாஷ் நமது மனத்தை நன்கு அறிந்து வைத்திருந்தார். தமக்கு நியாயம் என்று தோன்றிய பாதையில் செல்கிற வீரம் உள்ளவர். எந்த அடிமைத்தனத்துக்கு எதிராக அவர் ஆன்மா போராடியதோ அந்த அடிமைத்தனத்திலிருந்து அவர் இன்று விடுதலை பெற்றும் விட்டார். அமர நிலையை அடைந்து விட்டார்."

முஸ்லிம் லீகுடன் சமரசமாகப் போக ஸி. ஆர். எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்காக அவரைக் குறை கூறுவது தொடர்ந்தது. சில சமயம் அது இயல்பானதாக இருந்தது. வேறு தருணங்களில் அபத்தமாகவும் அற்பத்தனமாகவும் விளங்கியது. அத்தனையையும் தாங்கிக் கொண்டார் ஸி. ஆர். "கடவுள் அருளால் காண்டாமிருகத் தோல் படைத்தவராக இருக்கிறீர்கள்!" என்று காந்தி ஸி. ஆரிடம் கூறினார். ஆனால் இது சரியான கணிப்பு அல்ல. ஸி. ஆர். நொந்து போன மனத்துக்கு ஆறுதலாக இலக்கியத்தை நாடினார். மாலை நேரங்களில் டி. கே. ஸி.யைச் சந்தித்துக் கம்பராமாயணம் பற்றியோ அல்லது நவீன தமிழ் இலக்கியம் குறித்தோ பேசிக் கொண்டிருந்தார். அல்லது டி. டி. கே. வீட்டுக்குப் போய் அளவளாவிக் கொண்டிருந்து விட்டுப் புத்தகங்களை இரவல் வாங்கி வந்தார். ("ராஜாஜி அவற்றைத் திருப்பித்தர மறந்ததே இல்லை" என்று டி. டி. கே. பின்னால் ஒரு சமயத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.) எதிர்காலத்தைப் பற்றியும் சிந்தித்தார் ஸி. ஆர். 1942 இயக்கத்தில் பங்கேற்று மரண தண்டனை விதிக்கப்பட்ட இளைஞர்கள் சார்பில் மனுக்களை எழுதித் தருவதிலும் அவர்களுக்காக லண்டனிலும் இந்தியாவிலும் வாதாட வழக்குரைஞர்களை ஏற்பாடு செய்வதிலும் இதற்கெல்லாம் செலவுக்குப் பணம் திரட்டுவதிலும் ஓரளவு திருப்தி அடைந்தார். உலக யுத்தம் முடிந்த நிலையில் இந்த இளைஞர்களுக்கும் விமோசனம் கிடைத்தது.

இதற்கிடையில் பிரிட்டனில் கன்ஸர்வேடிவ் கட்சி பொதுத் தேர்தலில் தோற்று தொழிற்கட்சி மகத்தான வெற்றி பெற்றுப் பதவிக்கு வந்தது. புதிய அரசு வேவலை லண்டனுக்கு அழைத்துப் பேசியது. யுத்தம் காரணமாக நீண்ட காலம் ஒத்திப் போடப்பட்டிருந்த மத்திய, மாகாணத் தேர்தல்கள் சீக்கிரமே நடக்கும் என்று அறிவிக்கக் கூறியது. தேர்தலுக்குப் பிறகு புதிய மத்திய நிர்வாகக் குழு அமைய ஏற்பாடுகளைக் கவனிக்குமாறும் வைஸ்ராய் கேட்டுக் கொள்ளப்பட்டார். இப்போது எதிர்பாராத விதமாக எதிர்க்கட்சித் தலைவராக விளங்கிய சர்ச்சிலையும் வேவல் சந்தித்தார். இந்தச் சந்திப்பின் போது சர்ச்சிலின் கடைசி வார்த்தைகள் என்ன என்பதை வைஸ்ராய் தமது நாட்குறிப்பில் எழுதியிருக்கிறார்: "இந்தியாவை முழுவதுமாகப் பறிகொடுத்து விடாதே; ஒரு துண்டத்தையாவது பாக்கி வைத்துக் கொள்!"

தேர்தல் இந்தியர்களுக்கு மத்திய ஆட்சியில் அதிகாரங்களை வழங்காது. மாகாணங்களில் மந்திரிசபைகள் அமைந்தாலும் அவற்றின் அதிகாரங்கள் கணிசமாகக் கட்டுப்படுத்தப்பட்டே இருக்கும். என்றாலும் காங்கிரஸோ அல்லது முஸ்லிம் லீகோ எவ்வளவு பலத்துடன் அல்லது பலவீனமாக விளங்குகிறது என்பதைத் தேர்தல்கள் உணர்த்தும். அதையொட்டி பிரிட்டன் அதிகார மாற்றம் செய்யும்போது வாரிசு உரிமைகள் பற்றிய கருத்துக்களை இத்தேர்தல்தான் உருவாக்கும், நிர்ணயிக்கும். எனவே தேர்தல்கள் மிகுந்த முக்கியத்துவம் பெற்றன. போட்டிகள் தீவிரமடைந்தன.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

# காரணங்கள்



இளமை விடைபெறப் போகும் வயது இளங்கோவுக்கு. மீசையிலிருக்கும் நான்கு நரைத்த முடிகளும் (தலைநரை முடிகளை எண்ணி மாளாது!), உச்சந்தலை பௌர்ணமியும் அவனுக்கு வயதாகிவிட்டதென்று எந்த நேரத்திலும் சொல்லத் தயாராயிருக்கும் சாட்சிகள்.

கேட்டால், 'வயதுமுப்பத்திஇரண்டுதான்' என்பான். ஆனால், இன்னும் ஐந்து வயதைக் கூட்டிக்காட்டும்படியான தோற்றம். குழி விழுந்த கன்னங்களும் கண்களும் 'தயிர்வடை தேசிகனை' நினைவுறுத்தும். இத்தகைய அவனது தோற்றத்துக்கு அவன் வீட்டை நிரந்தரக் குத்தகை எடுத்திருக்கும் வறுமையும் ஒரு காரணம்.

அவனுக்கு இன்னும் திருமணமாகவில்லையென்பதுதான் நம் கதைக்கு மையக்கரு. ஆனால் இந்த வயதான வாலிபனையும் விஜயா என்கிற பெண்ணொருத்தி காதலிக்கிறாள் என்பது 'கின்னஸ்' புத்தகத்தில் எழுதப் படவேண்டிய புது ரெக்கார்டு!

இளங்கோ, இன்னும் எத்தனை வருஷங்களுக்குத்தான் காதலிச்சிட்டே இருப்பீங்க... எப்பத்தான் கல்யாணம்?'' என்று கேட்டால்,

''என்னோட தங்கை இந்துவுக்குக் கல்யாணம் ஆனதுக்கு அப்புறம்தான் எங்க கல்யாணம்...!'' என்பான்.

அவன் சொன்ன காரணம் நியாயமானதுதான். அதற்காகப் பதினைந்து வருடங்களுக்கு மேலாய்க் கடிதத்திலேயேவா காதலித்துக் கொண்டிருப்பது? பதினைந்து வருடங்களுக்கு முன் இவனது பக்கத்து வீட்டில் விஜயாவின் குடும்பம் குடியிருந்த போது மலர்ந்த காதல், அவள் தந்தைக்கு வேலை மாற்றலாகி அவர்கள் தருமபுரிக்குச் சென்றுவிட்ட பிறகு கடிதத்தில் தொடர்கிறது.

இன்று வந்து இளங்கோ சொன்ன விஷயம் எனக்கு மகிழ்ச்சி தந்தது. உறவுக்கார அநாதைப் பையன் ஒருவன் இந்துவை வரதட்சணை இல்லாமலேயே கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிச்சிட்டான்டா... வர்ற வெள்ளிக்கிழமை நம்ம ஊர் முருகன் கோயில்லயே சிக்கனமாக் கல்யாணம் பண்றதா முடிவு பண்ணிட்டோம்!'' என்றான். அந்த நல்லவனை மனதார வாழ்த்தினேன்.

இந்துவுக்குக் கல்யாணம் முடிந்து ஒரு மாதம் கழிந்திருக்கும்.

''ஏன்டா இளங்கோ, உன் தங்கை இந்துவைக் காரணம் காட்டித்தான் உங்க கல்யாணத்தைத் தள்ளிப் போட்டுக்கிட்டே வந்தே... இன்னும் எதுக்குடா வீணாக் காலம் கடத்தறீங்க... உங்க காதல் ரெண்டு வீட்டாருக்குமே தெரிஞ்ச விஷயம்தானே! அப்புறம் எதுக்காக இன்னும் தாமதிக்கணும்! உனக்கு இன்னும் வயசாகலைன்னு நெனச்சிட்டிருக்கியா?'' என்று யதார்த்தமாய்க் கேட்டேன்.

அவன் மௌனமாயிருந்தான்.

அவனின் மௌனம் என் மனத்தை நெருடியது — ''இளங்கோ நான் எதுவும் தப்பாக் கேட்டிருந்தா என்னை மன்னிச்சிடு!''

''சே, அப்படியொண்ணுமில்லடா ராஜா!''

''பின்னே எதுக்காகடா இன்னும் காலம் கடத்தறே... உன்னோட படிச்ச எனக்கு இப்போ மூணு பிள்ளைகள் இருக்கு, தெரியுமா?''

''ராஜா, எங்க கல்யாணத்துக்கு என்னோட தங்கை தடையா இருந்தது போக இப்ப விஜயாவோட தங்கை காரணமாயிருக்காடா... அவளுக்குக் கல்யாணம் ஆனதுக்குப் பிறகுதான் எங்க கல்யாணம்னு அவுங்க வீட்ல சொல்றாங்க!''

''அவளோட தங்கை தடையா இருக்காளா...? எப்படிடா?''

''விஜயா, கீழ்ச்சாதிக்காரனான என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா, அப்புறம் அவளோட தங்கைக்கு எந்தச் சம்பந்தமும் கிடைக்காதாம்... அதனால அவளுக்கு முதல்ல கல்யாணம் ஆகட்டும்னு சொல்றாங்க!''

'இந்தஜென்மத்திலஉனக்குக்கல்யாணமே கிடையாதுடா!' என்று சொல்ல நினைத்து அடக்கிக் கொண்டேன்.

— பட்டுக்கோட்டை ராஜா

# வாசகர்கள் நெஞ்சத்திலும் ஆறாத் தழும்பு!

* முதலாவது வாசகர் பட்டிமன்றம் மிகவும் சிறப்பாக அமைந்திருந்தது. ஓர் அரசியல் கூட்டத்திற்குச் சென்றது போன்ற உணர்வைத் தந்தது.

கொப்பம்பட்டி, செ. அன்பு மதியழகன்.

* நடுப்பக்க புதுக்கவிதைகள் நறுக்குத் தெறித்தது போல் அருமையாக இருந்தன!

பெங்களூர் — 53, ''லட்சுமிப்பிரியா''

* பம்பாய்க் கோயில்கள் பற்றிய கட்டுரையில் (கல்கி 31.8.86) சீபனஸ்வாடி ஸ்ரீ வெங்கடேசுவரர் கோயில் வைஷ்ணவ ஆராய்ச்சிக்காக ஓர் ஆராய்ச்சிக் கேந்திரமே நடத்துவதாக எழுதப்பட்டுள்ளது. இது வைணவ ஆராய்ச்சிக்காக மட்டும் ஏற்பட்டதன்று. இந்திய கலாசாரம், புராதன இந்திய சரித்திரம், தத்துவம், சமஸ்கிருதம் முதலிய பலதுறைகளில் ஆய்வுகள் நடக்கின்றன. பம்பாய் பல்கலைக்கழகத்துடன் தொடர்புடையது இக்கேந்திரம்.

பம்பாய், வேங்கடாச்சாரி,
இயக்குனர்,
அனந்தாசார்யா இந்திய இயல் ஆய்வுக் கேந்திரம்.

* கல்கி 24.8.86 இதழில் 'இப்படியும் ஒரு போட்டி' என்ற செய்தி தொடர்பாக...:

திண்டுக்கல் சென்ட்ரல் ரோட்டில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத் தொழிற்சங்க அலுவலகக் கட்டடம் இருப்பது உண்மையே. அந்த இடத்தில் அண்ணா தி. மு. கழகம் துவங்குவதற்கு முன்பே அங்கு தொழிலாளர் மன்றம் இருந்தது. தொழிலாளர் வசதிக்காகக் கீற்றில் இருந்த தொழிலாளர் மன்றத்தைக் கட்டடமாக மாற்றினோம். இந்தச் சூழ்நிலையில்தான் அந்த இடத்தில் தொழிற்சங்க அலுவலகம் கட்டப்பட்டுள்ளது. இது 1000 தொழிலாளர்களுக்காக அவர்களின் பிரச்னை குறித்துப் பேச வரும் பொருட்டு . அமைக்கப்பட்டுள்ளது. ரூ. 15,000 செலவு செய்து எனது சொந்த முயற்சியால் கட்டியுள்ளேன். கட்டடம் நகராட்சியின் முழு அனுமதியோடு கட்டப்பட்டதே: ஆக்கிரமிப்பு அல்ல. அவ்விடத்துக்கு நகராட்சிக்கு மாதம் ரூ. 25 வாடகை செலுத்தி வருகிறேன்.

திண்டுக்கல், சு. முத்துகோபால்.

* தொலைபேசி ஒரே ஒரு முறை தொல்லை கொடுத்துவிட்டது என்பதற்காகத் துப்பாக்கியுடன் மிரட்டச் சென்ற மத்திய அமைச்சரை நாசூக்காகவும், தொலைபேசி நிர்வாகத் திறனை வேடிக்கையாகவும் வர்ணித்து, தலையங்கத்தில் வெளுத்து வாங்கி விட்டீர்கள்.

நெல்லிக்குப்பம், எஸ். ஜே. சலீம் தமீஜுதீன்.

* உதயசூரியனின் வாழ்வில் இழைக்கப்பட்ட ரணச் சம்பவம் அவர் முகத்தில் மட்டுமில்லாமல் படித்த வாசகர்களின் நெஞ்சத்திலும் ஆறாத் தழும்பாகப் பதிந்துவிட்டது.

சென்னை — 30, ரா. ராமசுவாமி.

* முதல் பக்கத்தில் உங்களை முழுமையாகப் புரிந்துகொண்டேன்! இந்தியை ஆதரிப்பதற்கும் உரிமையுண்டு என்று பாரபட்சமின்றி விளக்கியதைத்தான் சொல்கிறேன்!

ஈரோடு — 2, அருண்.

* சரித்திர நாவல்களில் மட்டுமா சரித்திரம் படைத்தார் பேராசிரியர் கல்கி? இந்தத் தலைப்பை ஒட்டியே ஒரு பட்டிமன்றம் நடத்தலாம் போலிருக்கிறதே!

சென்னை — 14, ஐயாறு எஸ். வாசுதேவன்

* கல்கியைப் பற்றிய கலந்துரையாடல் சுவையாக இருந்தது. ஆனால், இந்தப் பத்திரிகைகள், எந்த கலந்துரையாடலுக்கும் சென்னையைச் சேர்ந்தவர்களை மட்டுமே தேர்ந்தெடுப்பது வேதனையைத் தருகிறது!

ஸ்ரீரங்கம், மேகதூதன்.

* சென்ற இதழ் கோவி. மணிசேகரனின் தொடரில் அரசியல் வாடை அதிகம். இது தேவைதானா?

பட்டுக்கோட்டை, எஸ். சந்துரு.

* தாம்பத்தியத்தின் மென்மையான மன அறிதல்களைத் தமிழினியன் எழுதிய 'ஆனால் இந்தக் கல்யாணி...?' சிறுகதை உணர்த்தியது.

சென்னை — 28, எம். தியாகராஜன்.

* லக்ஷ்மி ஸ்ரீநிவாஸனின் 'பட்டணப் பிரவேசம்' கதை ஆத்திக, நாத்திகர்கள் கொள்கைகளால் வேறுபட்டாலும், மனிதாபிமானத்தால் ஒன்றுபடுகிறார்கள் என்ற கருத்தை மிக அழகாக விளக்கியது. பாராட்டுக்கள்.

கோவை, உமார்த்தி.

ஸ்ரீ சங்கர மருத்துவ நிலையம்
(பதிவு செய்யப்பட்டது)
பம்மல், சென்னை — 600 075.

பம்மல் ஸ்ரீ சங்கர மருத்துவ நிலைய நிர்வாகக் குழுவினர்.

ஓர் அறிவிப்பு

பம்மல் ஸ்ரீ சங்கர மருத்துவ நிலையம், ஏழை எளிய மக்களுக்கு மருத்துவ சேவை செய்ய ஆரம்பிக்கப்பட்டது. 12.12.1984 முதல் பம்மலிலும் 15.7.85 முதல் அனகாபுத்தூரிலும், மீனம்பாக்கம் ரோட்டரி சங்க ஒத்துழைப்புடன் இரண்டு வட்டார மருத்துவ விடுதிகள் செயல்பட்டு வருகின்றன. பம்மல் ஸ்ரீ சங்கர் நகர் பகுதியில் ஆஸ்பத்திரி கட்ட ஸ்ரீ அப்பாசாமி ரியல் எஸ்டேட்டார் 14½ கிரவுண்டு நிலத்தை இலவசமாக வழங்கியுள்ளார்கள். இப்பகுதியில் ஸ்ரீசங்கர ஆஸ்பத்திரி கட்டவும் ஆந்திர பிரதேசத்தில் சித்தூரில் ரூரல் கிளினிக் ஒன்று கட்டவும் "சங்கரா உடனடி பம்பர்" பரிசு சீட்டு திட்டம் ஏஜென்ட் மூலம் வெளியிடப்பட்டது. இந்த லாட்டிரிச் சீட்டு திட்டத்திற்கும், ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடம் ஆச்சார்ய ஸ்வாமிகளுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை என்பதனை இதன் மூலம் பொதுமக்களுக்கு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

பம்மல் ஸ்ரீ சங்கர மருத்துவ நிலைய
நிர்வாகக் குழுவினர்

# புற்று நோய்க்கு ஆயுர்வேத சிகிச்சை



ஐந்து குழந்தைகளின் அன்னை, ஐம்பத்தொன்பது வயதான ஜெயம்மாவான எனக்கு, வெள்ளை அணுக்கள் வெளிப்படுதலில் வயிற்றில் வலி மிகுந்தது. இதன்பிறகு நடத்திய சோதனைகளில் டாக்டர்கள் கழுத்தின் பின்பகுதி நரம்பு மண்டலம் புற்று நோயால் பாதிக்கப்பட்டிருப்பதைக் கண்டறிந்தனர். பலவித ஆலோசனை மருந்துகளிலும் தோல்வியுற்ற பிறகு டாக்டர் பாபு ராவின் ஆயுர்வேத வைத்திய சிகிச்சை முறையைப் பற்றிக் கேள்வியுற்றேன். கண்டசி முயற்சியாக டாக்டர் பாபு ராவின் உதவியை நாடினேன். அவரது பன்னிரண்டு வாரங்கள் ஆயுர்வேத சிகிச்சைக்குப் பிறகு எனக்குப் புதுவாழ்வு மலர்ந்தது.

இப்பொழுது நான் புற்றுநோயின் அறிகுறிகளிலிருந்து முழுவதும் விடுபட்டு, நான் சந்தோஷமான இயற்கையான வாழ்வை நடத்தி வருகிறேன். நானும் எனது குடும்பத்தினரும் இந்தப் பத்திரிகையின் வாயிலாக எங்களது மனமுவந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம். நாங்கள் டாக்டர் எம். பாபுராவுக்கு என்றும் கடமைப்பட்டுள்ளோம்.

M. ஜெயம்மா,
ஸ்டுடண்ட் லேன், கத்ரி போஸ்ட்,
மங்களூர் (கர்நாடகா ஸ்டேட்)

| விலாசம் | போன் நெம் | பார்க்கும் கிழமை |
|---|---|---|
| டாக்டர் எம். பாபு ராவ்<br>கான்சர் இன்பர்மரி (ஆபீஸ்)<br>1–1–27 1/3, சிக்கடப்பள்ளி<br>ஹைதராபாத்–500 020 | 64735 | பிரதி வியாழன் & வெள்ளி |
| C/o. ஹோட்டல் சுதாரா,<br>உஸ்மான் ரோடு, தி. நகர்,<br>சென்னை–600 017. | 445164 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்,<br>எம்.ஜி. ரோடு,<br>பெங்களூர்–560 001. | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o. ஹோட்டல் கே.கே. இண்டர் நேஷனல்<br>தெற்கு ரயில் நிலையம் எதிரில்<br>எர்ணாகுளம், கொச்சின்–682 016. | 366010<br>366040 | பிரதி திங்கள் |
| C/o. ஹோட்டல் நடராஜ்,<br>பகட்கன்ஜ்<br>இம்பீரியல் தியேட்டர் அருகில்<br>புது தில்லி–110 055 | 522699 | பிரதி செவ்வாய் |
| C/o. ஹோட்டல் மிட்–டௌன்,<br>அந்தேரி ரயில்வே எதிரில்,<br>ஸ்டேஷன் (மேற்கு), பம்பாய். | 628882 | பிரதி புதன் |

## வாழ்க்கை வாழ்வதற்கே!

# வெற்றியின் விலை என்ன?



அருப்புக்கோட்டை, நெல்லை இடைத் தேர்தல் வெற்றியைக் கொண்டாட வாணம் விட்டதில் ஐந்து வயதுச் சிறுவன் மீது ஒரு வாணம் பாய்ந்து, வெடித்து, வயிற்றிலிருந்து குடலின் சிறு பகுதி வெளியே வந்து விட்டது! இந்தத் துயரத்தைத் தமது கடிதத்தில் குறிப்பிடும் கொரட்டி, கே. ஆர். சண்முகம் தொடர்ந்து வேதனைக் குரல் எழுப்புகிறார். சிறுவனை உடனே திருப்பத்தூர் மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றார்கள். அங்கே முதலுதவி மட்டும் அளித்து பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகச் சொல்லி விட்டார்கள். பையனின் தாய், தகப்பன் ஏழைகள். உண்டியலை உடைத்தும் கடன் உடன் வாங்கிக் கொண்டும் மதுரைக்கு விரைந்து பொது மருத்துவமனையில் சிறுவனைச் சேர்க்க முற்பட்டிருக்கிறார்கள். என்ன கொடுமை, அங்கே கடைநிலை ஊழியர் தொடங்கி, சாப்பாட்டுப் பிரிவு, எக்ஸ்ரே பிரிவு என்று தலைக்குத் தலை ரூ. 30, ரூ. 10, ரூ. 55 என்று பணம் கேட்டுப் பெற்றிருக்கிறார்கள்! சிறுவனுடைய வேதனையைச் சொல்வதா, ஏழைப் பெற்றோரின் கஷ்டத்தைக் கூறுவதா? இந்த அநீதிகளைக் களைய முடியவில்லையே என்று நம் மனம் படும் பாட்டை வர்ணிப்பதா? அந்தச் சிறுவன் உயிரின் விலை என்ன என்பது ஒருபுறமிருக்க, ஆளும் கட்சியுடைய வெற்றியின் விலை என்ன என்றும் கேட்கத் தோன்றுகிறது.

வெற்றி விழா கொண்டாட்டத்தில் இத்தனை ஆர்ப்பாட்டம் அவசியமா என்பது ஒருபுறமிருக்க இவ்வளவு அஜாக்கிரதையாக நடத்தப்பட வேண்டுமா என்ற கேள்வியும் எழுகிறது. வாண வேடிக்கைகளை ஆள் நடமாட்டமற்ற மைதானத்தில் தக்க பாதுகாப்புடன் நடத்த வேண்டும். சாலைகளில் அல்ல. தப்பித் தவறி விபத்து நேர்ந்தால் உடனே கவனிக்கத் தக்க முன்னேற்பாடுகளையும் செய்து கொள்ள வேண்டும். இதற்கெல்லாம் சட்டதிட்டங்கள் உள்ளன. ஆனால் பின்பற்றுவோர்தான் கிடையாது. போலீஸாரும் தட்டிக் கேட்பது இல்லை. 'ஆளும் கட்சி, தகராறு வரும், நமக்கேன் வம்பு...?'

போலீஸை மட்டும் குறை கூறிப் பயனில்லை. சட்டதிட்டங்களையும் விதிமுறைகளையும் கடைப்பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் நம்மில் எத்தனை பேருக்கு இருக்கிறது? சட்டத்தை மீறுவது வீரம் என்று இளைஞர்கள் எண்ணுகிறார்கள். மாறுகச் சட்டதிட்டங்களுக்கும் சமூகக் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டு நடக்கத்தான் மன உறுதி, தைரியம் எல்லாம் தேவை. சட்டம் எதற்கு இருக்கிறது? நம்மைக் காப்பாற்றத்தான். சட்டத்தை மீறும்போது நம்மை நாமே அபாயத்துக்கு உள்ளாக்கிக் கொள்கிறோம்.

சைக்கிள் லைட் இல்லாமல் போவது, மூன்று சைக்கிள்களில் மூன்று நண்பர்கள் பேசிக் கொண்டே சாலையை அடைத்தபடி செல்வது எல்லாம் சட்டத்தை ஏமாற்றுவது மட்டுமில்லை, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும். ஃபாக்டரிகளில் அணியும் மஞ்சள் ஹெல்மெட்டைப் போட்டுக் கொள்வதன் மூலம் ஸ்கூட்டர் ஓட்டிகள் சட்டத்தைத் திருப்தி செய்யலாம், ஆனால் அது பாதுகாப்பு அளிக்காது. ஹெல்மெட்டின் வார்பட்டையைப் பூட்டாமல் தொங்க விட்டுக் கொண்டு போவது, ஹெல்மெட்டைத் தலைக்கு அணியாமல் ஸ்கூட்டரின் நிலைக்கண்ணாடிக்கு அணிவித்துச் செல்வது எல்லாம் ஆபத்தை வரவேற்பதாகும். சட்டத்தை மீறுவதில் வெற்றி பெறலாம்; ஆனால் அதற்கான விலையை ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் தந்துதான் ஆக வேண்டும்.

எனது உறவினர் ஒருவர், இல்லற வாழ்க்கையைச் சந்திக்க வேண்டிய இளைஞர். அரசு ஆணை வருமுன்னரே ஹெல்மெட் அணியாமல் எங்கும் சென்றதில்லை. ஆணை பிறப்பிக்கப்பட்ட பின், ஒரே ஒருநாள் நண்பன் ஏதோ அவசர காரியமாக அழைத்தான் என்று அவனைப் பில்லியனில் அமர்த்திக் கொண்டு ஹெல்மெட் இன்றி விரைந்தார். அப்படி ஒரே ஒரு தடவை செய்த தவறுக்குச் சாட்சியாக இன்று அவருடைய ஹெல்மெட் தினந்தோறும் தாயின் கண்ணீரால் நனைக்கப்படுகிறது.

— ஜீவன்

* நா. இரகுநாதன், சின்னங்குப்பம்.

? ரஷ்யாவில் ஒரு மாநில அமைச்சர் லஞ்சம் வாங்கியதாகக் கோர்ட்டில் நிரூபிக்கப்பட்டு, அந்த அமைச்சருக்குக் கோர்ட் தூக்குத் தண்டனை விதித்துத் தீர்ப்புக் கூறியுள்ளதே?

! அது தேசம்! ஆனாலும் தண்டனை ரொம்பக் கடுமை!

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? நெல்லையில் ஆர். எம். வீ. தோற்றுப் போயிருந்தால்?

! அடுத்த கேள்விக்குப் பதில் சொல்லும் அனுபவம் ஏற்பட்டிருக்காது.

* ஜி. மெய்யப்பன், லெட்சுமாங்குடி.

? அதிகார துஷ்பிரயோகம் — விளக்கம் தாருங்கள்.



! சென்ற வாரம் நடந்த ஆர். எம். வீ. யின் மணிவிழாவுக்காக, அவர் குடியிருக்கும் திருமலைப் பிள்ளை ரோட்டில், பஸ் போக்குவரத்தை நிறுத்திப் பொதுமக்களையும் அந்தப் பகுதியிலுள்ள மூன்று பள்ளிக்கூடங்களிலும் படிக்கும் குழந்தைகளையும் திண்டாட வைத்தது, அவர் அமைச்சர் என்ற ஒரு காரணத்திற்காகத்தான். இது போன்ற அதிகார துஷ்பிரயோகங்கள் — அநாகரிகங்கள் வேறு மாநிலங்களில் நடப்பதில்லை. தமிழகத்திற்கு மட்டும்தான் இந்தச் சாபக்கேடு.

* ஆர். எம். வடுகநாதன், வேதாரண்யம்.

? அணிசேரா இயக்கத்தை லிபியா நாட்டு அதிபர் கடாஃபி கடுமையாகத் தாக்கிப் பேசியுள்ளாரே?

! லிபியாவில் அமெரிக்கா தாக்கியதை அணிசேரா நாடுகள் தீவிரமாகக் கண்டிக்கவில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, 'இத்தனை நாட்டு அதிபர்கள் ஒன்று கூடி மாநாடு நடத்தி என்ன பயன்? வன்மையான முறையில் செயல்படவில்லையே' என்று காரசாரமாக அவர் தாக்கித்தான் பேசிவிட்டார். இலங்கைத் தமிழர் பிரச்னையில் அணிசேரா நாடுகளின் அணுகுமுறையைப் பார்க்கும் போது, கடாஃபியின் பேச்சில் கணிசமான அளவுக்கு உண்மை இருக்கிறது என்றுதான் நமக்கும் தோன்றுகிறது. ஆனால் அதே சமயம் தென் ஆப்பிரிக்கப் பிரச்னையில் உறுதியோடு நின்று பாடம் புகட்டுவதில் மாநாடு நல்ல முன்னேற்றம் கண்டிருப்பதைப் பாராட்டத்தான் வேண்டும்.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? நமது கிரிக்கெட் தேர்வுக் குழுவில் குறை இருக்கிறது என்பதை ஏற்கிறீரா?

! ஏற்க மாட்டேன். 'ஒருநாள் ஆட்டத்தின் சுறுசுறுப்புக்கெல்லாம் சிறிதும் லாயக்கில்லாத சுனில் காவஸ்கரை விட்டுவிடலாம்; புதிய நபர் ஒருவரைச் சேர்த்துப் பரீட்சித்துப் பார்க்கலாம்' என்ற தேர்வுக் குழுவின் முடிவு நியாயமானது. என்றுமே ஒருநாள் காவஸ்கர் ரிடையராகத்தானே வேண்டும்? அவரை டெஸ்டிலிருந்து தேர்வுக்குழு ஒதுக்கவும் இல்லை. ஒருநாள் கிரிக்கெட்டுக்கு மட்டுமே ஒதுக்கியது. ஆனால் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு நடுங்கிப் போய், 'காவஸ்கரை ஒதுக்குவதா அபசாரம்! அபசாரம்!' என்று பதறியது. தேர்வுக் குழுவும் தலைவணங்கித் தனது ஆணையைத் தானே விழுங்கிவிட்டு காவஸ்கரை மீண்டும் சேர்த்துக் கொண்டது. ஆனால் தேர்வுக்குழு எடுத்த முதல் முடிவே சரியானது என்பதை காவஸ்கர் அடுத்தடுத்த இரு ஒரு நாள் பந்தயங்களிலும் நிரூபித்திருக்கிறார்!

## நீங்கள் கேட்டவை — தராசு

* இரா. சுவாமிநாதன், சீர்காழி.

? ஒரு பாமர மனிதனும் ப்ரூக்ளின் மருத்துவமனைக்குச் சென்று சிகிச்சை பெற்றுக் கொள்ளக் கூடிய காலம் எப்போது வரும்?

! அப்படியொரு பரிதாபம் யாருக்குமே வரவேண்டாம் என்பதுதான் நமது பிரார்த்தனை!

* ஸ்ரீ மனோபாரதி, பாண்டிச்சேரி — 13.

? விழி பேசும் மொழிக்கு என்ன அர்த்தம் கொள்ளலாம்?

! இனி வாய்ச் சொற்களுக்கு வேலையில்லை என்பதாகவும் இருக்கலாம். சில நேரங்களில் 'வாலாட்ட வேண்டாம்' என்ற எச்சரிக்கை மொழியாகவும் இருக்கலாம். எனவே அவசரப்பட்டு அர்த்தத்தை மாற்றிப் புரிந்து கொண்டு அவஸ்தைப்பட வேண்டாம்.

* கே. ரஞ்ஜனிப்ரியன், பள்ளிப்பாளையம்.

? தாங்கள் சமீபத்தில் ரசித்துப் பார்த்த திரைப்படம்?

! படம் என்று சொல்ல முடியாது; நடிப்பு என்று சொல்லலாம். சிதம்பரம் படத்தில் தமிழ்ப் பெண்ணாக நடித்திருக்கும் ஸ்மிதா பாடீலின் நடிப்பில்தான் எத்தனை தத்ரூபம்! ஒரு தமிழ்ப் பெண்ணின் பாத்திரத்தைத் தத்ரூபப்படுத்திக் காட்ட ஒரு வடக்கத்திப் பெண்தான் வரவேண்டியிருக்கிறது!

* கே. ரமேஷ், சென்னை — 4. *

? ஆளுங்கட்சி உறுப்பினர் தேர்ந்தெடுக்கப் பட்டால் ஆக்கப் பணிகள் அதிகம் நடைபெறும் என்றும், எதிர்க்கட்சி உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டால் அத்தொகுதி நலன் புறக்கணிக்கப்படும் என்றும் அண்மையில் ஆலடி அருணா ஒரு பேட்டியில் கூறியிருக்கிறாரே. இதுதான் ஜனநாயகமா? இதுதான் என்றால் அந்த ஜனநாயகம் நமக்குத் தேவைதானா?

! 'எங்களுக்கு வாக்களிக்காத மக்களின் நலன் புறக்கணிக்கப்படும்!' என்பது கடைந்தெடுத்த சர்வாதிகார மிரட்டல். அப்படிக் கூறும் கட்சி ஒரு போதும் ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள கட்சியாக இருக்க முடியாது. இத்தகைய ஜனநாயகம் நமக்குத் தேவையா என்பதைவிட இப்படிப்பட்ட கட்சிகளும், ஆலடி அருணாக்களும் நமது ஜனநாயகத்துக்குத் தேவைதானா? என்று மக்கள் யோசிக்க வேண்டும்.

* பிரபா லிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.

? மௌன ராகத்தில் ரேவதியின் நடிப்பு எப்படி?

! ஸ்மிதா பாடீல், ஷபனா ஆஸ்மி போன்ற அகில இந்திய நடிகைகளோடு போட்டி போடக் கூடிய ஒரே நடிகை ரேவதிதான். ஆனால், அவரும் இப்போது நடிப்புக்கு முழுக்குப் போட்டு விட்டாரே! அதுதான் வருத்தமாக இருக்கிறது.

* ஜி. ராஜகோபால், சென்னை — 82.

? சமீபத்தில் தங்களைச் சிந்திக்க வைத்த பரிதாப நிகழ்ச்சி?

! 'பான் — ஆம்' விமானத்தை 'ஹைஜாக்' செய்ய கராச்சியில் நடந்த முயற்சியன்றி வேறு எதுவாக இருக்க முடியும்? அந்தப் பயணிகள் அடைந்த துன்பம் படு பரிதாபம். இப்படி விமான 'ஹைஜாக்' மூலம் தங்கள் காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம் என்று நம்புகிற பயங்கரவாதிகளின் முட்டாள்தனம் அதைவிடப் பரிதாபம்! விமானக் கடத்தல் முயற்சியின் போது பயணிகளை விடுவிக்கும் முயற்சியில் இறங்கிய பாகிஸ்தான் ''குளறுபடி செய்துவிட்டது'' என்று ராஜீவ், ராஜரீக நற்பண்புகளை ஒதுக்கி அந்நிய நாட்டிலிருந்தபடி அறிக்கை விட்டது மற்றொரு பரிதாபம். இத்தகைய ஓர் இக்கட்டான நிலை நாளையே நமக்கும் ஏற்படலாம், நம் மீதும் இவ்வாறு பழி சுமத்தப்படலாம் என்பதை உணர்ச்சி வேகத்தில் ராஜீவ் சிந்திக்காமல் போனது ரொம்பப் பரிதாபம்! ஏன், பயணிகள் மீட்கப்பட்டபின் அவர்களைக் கராச்சியிலிருந்து பம்பாய்க்குத் திரும்ப அழைத்து வருவதிலே கூட நமது விமானத் துறையே தாமதங்களும் குளறுபடி குழப்பங்களும் நிறையவே செய்திருக்கிறது. இதைவிடப் பரிதாபம் வேறு ஏது?

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

கே. ரமேஷ்,
16, பிருந்தாவனம் தெரு,
சென்னை — 600 004.

# நமது கிரிக்கெட் தேர்வுக் குழுவில் குறை இருக்கிறதா?

# இந்தச் சண்டை எப்போது ஓயும்?



• சாலையை ஆக்ரமித்துள்ள குடிசைகள்

கடலூர் — திருப்பாதிரிப்புலியூரிலிருந்து நத்தவெளி என்னும் கிராமத்திற்குச் செல்லும் பாதையில், பெரிய வாகனங்கள் எதுவும் செல்ல முடியாது. காரணம், சாலையின் இரண்டு பக்கங்களிலும் சுமார் முந்நூற்றைம்பது குடிசைகள் ஆக்கிரமித்துக் கொண்டுள்ளன.

இதனால் நத்தவெளி கிராமத்துப் பக்கம் செல்பவர்களுக்குப் போக்குவரத்து இடைஞ்சல் என்றால், இந்தக்குடிசைப் பகுதியிலிருந்து வரும் கழிவு நீர், கண்டபடி ஓடிவந்து கண்ட கண்ட இடங்களில் தேங்கிக் கிடப்பதால் பக்கத்திலிருக்கும் சரஸ்வதி நகர், ராஜம் நகர்வாசிகளுக்குச் சுகாதார இடைஞ்சல்! இதனால் இரண்டு தரப்பினரும் ஒருவரையொருவர் பகையாளிகளாகக் கருத ஆரம்பித்து விட்டார்கள். அவ்வப்போது சண்டையும் வருவதுண்டு!

சரஸ்வதி நகர், ராஜம் நகர்வாசிகளைச் சந்தித்த போது, ''எல்லாம் வோட்டுக்கள் படுத்தும்பாடுதான் சார்! அதனால்தான் இப்படி அநியாயமாகச் சாலையை ஆக்கிரமித்துக் கொண்டுள்ள இந்தக் குடிசைகளை அப்புறப்படுத்த மாட்டேனென்கிறார்கள்!'' என்றார்கள்.

குடிசைவாசிகளைச் சந்தித்த போது, ''நாங்கள் ஆக்கிரமித்திருப்பது வாஸ்தவம் தான். அதேபோல் பக்கத்திலுள்ள பெரிய பெரிய பண்ணையார்களும் ரோடு நிலத்தைத் தங்கள் விவசாய நிலத்தோடு சேர்த்துக் கொண்டிருக்கிறார்களே, அது நியாயமா? எங்களுக்கு அரசு வேறு இடம் கொடுத்தால் —இனமாக அல்ல, தவணை முறையில் கொடுத்தால் — நாங்கள் அடுத்த நிமிடமே காலி செய்யத் தயாராக இருக்கிறோம். எங்களுக்கு மட்டும் சண்டை போட்டுக் கொண்டிருக்க ஆசையா, என்ன?'' என்றார்கள்.

ஆக, இந்தச் சண்டை எப்போது ஓயும்? அரசு மனம் வைத்தாலன்றிச் சிறிதும் சாத்தியமில்லை!

# புதுமை அல்ல; கொடுமை!



தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள திருத்துறையூர் அரசு உயர்நிலைப் பள்ளிக்குச் சென்றால், அங்குள்ள ஒவ்வொரு மரத்திலும் ஒவ்வொரு கரும்பலகை பொருத்தப்பட்டு அந்த மரங்களுக்கடியிலேயே ஏறத்தாழ பாதிக்கு மேற்பட்ட வகுப்புகள் நடைபெறுவதைப் பார்க்கலாம். சுமார் நானூறு மாணவ, மாணவியர் படிக்கும் அந்தப் பள்ளியில் மட்டும் இப்படித் 'திறந்தவெளி வகுப்பறைகள்' என்று ஏதாவது புதிய கல்விக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறார்களோ என்று யாரும் எண்ண வேண்டாம். போதுமான கட்டட வசதியில்லாத கொடுமைதான் இதற்குக் காரணம்!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

REGISTERED No. M. 4382
Registered as a Newspaper in Sri Lanka